விவேகானந்த சுவாமிகள்
அருளிய சிகாகோ
பிரசங்கம்

ஸ்ரீமத்

# விவேகானந்த சுவாமிகள்

அருளிய

# சிகாகோ பிரசங்கம்




திரிசிரபுரம்

தேசீயக் கலாசாலைத் தமிழாசிரியர்

உறையூர். எஸ். வி. வரதராஜையங்கார்

மொழிபெயர்த்தது.

சென்னை

"ஆனந்தபோதினி" பத்திராதிபர்

நா. முனிசாமி முதலியாரவர்களால்

வெளியிடப் பெற்றது.

1929

ஸ்ரீ




# நூன்முகம்

மகான்களுடைய தோற்றத்தால் தேசம் செழிக்கின்றது; மதோத்தாரணமும் தேச நன்மைகளும் விருத்தியாகின்றன. மதக் கொள்கைகளிடத்து நம்பிக்கை குறைந்து, பாபகிருத்தியங்கள் வளர்ந்து, தேசநன்மைகள் தேசுற்று மயக்கம் நிலையெடுக்கும் காலங்களிலெல்லாம் மகான்கள் அவதரிக்கின்றனர்; திக் விஜயம் செய்து, தங்கள் வழுவற்ற ஒழுக்கத்தாலும், தெய்வீக வல்லமையாலும் தர்மோபதேசம் செய்து "எழுமின்! விழிமின்! கருதிய கருமம் கைகூடும்வரை உழைமின்! உணர்மின்!" என்று மக்களைத் தட்டி யெழுப்பி வழிகாட்டுகின்றனர். காலத்திற்கேற்ப மதசீர்திருத்தங்கள் நிகழ்கின்றன. இத்தகைய மகான்களுடைய சரித்திரமும் உபதேசங்களும் அழியாமல், சாஸ்வதமாய் நின்று மதப்ரபாவ கிரந்தங்களாய் மக்களுள்ளத்தில் அன்பு வெள்ளத்தைப் பாய்ச்சுகின்றன.

இப்பேர்க்கொத்த அவதார புருஷர்களில் பகவான் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சரைப் பற்றியும், ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகளைப் பற்றியும் கேள்விப்படாதவர் இலரென்றே சொல்லலாம். இவர்கள் முறையே குரு சிஷ்யர்களென்பதும் மலையிலக்கு. ஸ்ரீராமகிருஷ்ணரின் திவ்யானுக்கிரகத்தால் பூப் பிரதக்ஷிணம் செய்து ஹிந்துமதத்தின் பிரபாவத்தை அயல்நாடுகளில், நவீன விஞ்ஞான-தத்துவ கிரந்தஆதாரங்களுடன் நானா தேசத்தாரும் நவின்றேத்த வெளியிட்ட ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகள் பிரசங்கங்களில் முதன்மை பெற்ற "சிகாகோ பிரசங்க"த்தை மொழிபெயர்த்துத் தரவேண்டுமென்று ஜனோபகாரி ஸ்ரீமான் நா. முனிசாமி முதலியாரவர்கள் என்னைத் தூண்ட இயன்றவரை முயன்று எளிய நடையில் மொழிபெயர்த்தேன். முதலியாரவர்கள் தமது "ஆனந்த போதினி" வாயிலாகச் செய்துவரும் தேசோபகாரம் தமிழுலகம் அறிந்ததே. இந் நூலினால் ஏற்படும் நற்பயனனைத்திற்கும் அவரே பாத்யஸ்தராவார். மொழிபெயர்ப்பில் ஏதேனும் சோர்வு நேர்ந்திருக்குமாயின் அன்புடன் பொருத்தருள வேண்டுகின்றேன்.

"சரஸ்வதி நிலயம்,"
உறையூர், 26-8-29. } எஸ். வி. வரதராஜையங்கார்.




மகா வாக்கியம்.

"உத்திஷ்டத! ஜாக்ரத! ப்ராப்யவராந்
நிபோதத!"

எழுமின்! விழிமின்! கருதிய கருமம்
கைகூடும்வரை உழைமின்! உணர்மின்!

*"Arise! Awake! Stop not till the
Goal is reached"*

(கடோபநிஷத் 3-ம் வல்லி. 14-ம் வாக்.)

ஸ்ரீ

# ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகள்

அருளிய

# சிகாகோ பிரசங்கம்

——:(o):——

## சரித்திரச் சுருக்கம்.

மகான்களின் அவதாரப்ரபாவமுடையது வங்காளம். அதன் தலைநகர் கல்கத்தா என்பது. கல்கத்தா நகரின் ஒரு பகுதிக்குச் சிம்லா என்று பெயர். அதில் பிரபல நியாய வாதியும் காயஸ்தர் என்னும் கணக்காயர் குலத்துத் தோன்றலுமான விஸ்வநாத தத்தர் என்பவர் வாழ்ந்து வந்தார். அவரது வாழ்க்கைத் துணைவியின் பெயர் புவனேஸ்வரி. காசி விஸ்வேஸ்வரரின் திவ்யானுக்ரகத்தால் பரம பக்த சிரோன்மணிகளான இவர்கட்கு 1863௵ ஜனவரி௴ 12௳க்குச் சரியான தமிழ் ருத்ரோத்காரி௵ மார்கழி௴ 30௳ மங்களவாரம், ஞாலத்தில் ஞானம் பெருக, அம்புவியில் அறந் தழைக்க ஓர் திருக்குழந்தை அவதரித்தது. அக்குழந்தைக்குப் பெற்றோர்கள் நரேந்திர நாதன் என்ற பிள்ளைத் திருநாமமிட்டு வளர்த்து வந்தனர். உரிய பருவத்தில் நரேந்திரர் வித்யாரம்பம் செய்விக்கப் பெற்று, ஆசிரியர்களும் மாணவர்களும் கொண்டாட மென்மேலும் வயதிலும் கலையிலும் வளர்ந்து கலா குமாரப் (பி. ஏ) பரீக்ஷையில் தேர்ந்தார். உயர்தரக் கலாசாலையில் வாசித்து வரும்போதே,

கல்கத்தா நகருக்குத் அருகாமையிலுள்ள தக்ஷிணேஸ்வரம் என்னும் க்ஷேத்திரத்தில் காளிதேவியின் வரப்ரசாதியாய், "காமினி காஞ்சன" ஆசையை அறவே விட்டு, அணுமுதல் அண்டம் வரையில் யாவும் ஈஸ்வரமயம் என்னும் அத்வைத ஞானம் அனுஷ்டானத்தில் கைவரப்பெற்றுச் சித்த புருஷ ராய் விளங்கிய பகவான் ஸ்ரீராம கிருஷ்ண பரமஹம்ச தேவரின் சக்யம் அவருக்கு ஏற்பட்டது. அதி பால்யத்தில் ஆங்கில நாகரிகப் பெருமிதத்தில் ஆழ்ந்து, மத உண்மைகளை மாசற அறிய வேண்டுமென்ற தாபத்தால் மிடுக்காய்ப் பல பெரியார்களை எதிர்த்தும் வாதாடியும் கேலிசெய்தும், அலக்ஷிய பாவம் காட்டியும் அலைந்து திரிந்த நரேந்திரருக்கு அம் மகானால் ஆத்ம சாந்தி ஏற்பட்டது. மத உண்மைகள் நன்கு விளக்கமாயின. விளங்கக்கண்ட விஷயத்தை விருத்திசெய்ய வேண்டுமென்ற ஆவல் அதிகரித்தது. அவர் மனவுறுதி யுடன் அம் மகானது திருவடிகளைப் பற்றி, பக்தி, ஞான, கர்ம யோக, மார்க்கங்கள் ஆத்மவிசாரத்தால் கைகூடப் பெற்று, யோகசித்தி யெய்தி, குருவின் சாமதசையில் காவி யும் 'விவேகானந்தன்' என்ற தீக்ஷாநாமமும் ஏற்று, குரு தேவர் தீர்க்க சமாதியடைய யாத்திரை மேற்கொண்டு, ஹிமாசலத்திலுள்ள க்ஷேத்திரங்களைத் தரிசித்து, புண்ணிய துறைகளாடி தக்ஷிணத்தை யடைந்து, க்ஷேத்ரி மைசூர் முதலான சுதேச மன்னர்களின் கூட்டுறவு ஏற்பட, தமிழ் நாட்டை யடைந்து, இராமநாதபுரம் மகாராஜா ஸ்ரீபாஸ்கர சேதுபதி யவர்களைக் கண்டு, பின்னர், நேரே இராமேஸ் வரத்தை யடைந்து, சில நாட்களிருந்து, பின் கன்னியா குமரியை யடைந்து தபேகத் தியானபராய் ஒரு பக்ஷ மள வும் யோக சாதனங்களில் ஈடுபட்டிருந்தார்.

அதன்மேல், சுவாமிகள் கிழக்குக் கடற்கரையோரமாய் வடக்கு நோக்கிப் புறப்பட்டு, புதுவைமா நகரை யடைந்து,

அங்கிருந்து சென்னைக்கு எழுந்தருளினார். சென்னையிலிருந்த பிரபலஸ்தர்களும், பதவியாளர்களும்—அதிபால்யரும், சகல சாஸ்திர விற்பன்னரும், தேஜஸ்வியுமான சுவாமிகளின் தெளிவான அரிய உபதேசங்களிலும், சொல்விற்பன்னமும் சாதுரியமுமுடைய உபந்நியாசங்களிலும் ஈடுபட்டு ஆனந்தித் திருந்தார்கள். இவ்வமயம், அமரிக்கர்கள் ஒரு சர்வ தர்ம மகாசபையை அமரிக்காவின் பிரதம நகரான 'சிகாகோ'வில் கூட்டப்போவதாகவும், உலகத்திலுள்ள சகலமதஸ்தரும் தத்தம் பிரதிநிதிகளை யனுப்பக் கோருவதாயும் ஓர் அறிக்கை வெளியிட்டிருந்தனர். ஹிந்து மதத்தின் சார்பாக பிரதிநிதியை அனுப்புவதற்கு, ஹிந்துமத கிரந்தங்களை ஐயந்திரிபறக் கற்றறிந்தவர்கள் இருந்தபோதிலும், ஆங்கிலத்தில் அதனை வெளியிடக்கூடிய பாண்டித்யம் அமைந்திருப்பது அபூர்வமாக விருந்தது. அப்படி இரண்டொருவர் இருந்தாலும், கப்பலேறி அயல்நாடுகளுக்குச் செல்பவரை ஜாதிப்ரஷ்டம் செய்வது என்னும் திட்டத்திற்கு அவர்கள் பயந்து ஏக மனந் துணியவில்லை. சென்னை வாசிகள் என்னசெய்வதென்று தயங்கி மயங்கிக்கொண்டிருக்கும்போது, சுவாமிகள் அங்கு வந்துசேர்ந்தார். அவர் சிகாகோவிற்குச் செல்ல இசைந்தமை கண்டு, சென்னை வாசிகள் குதூகல மடைந்து, அவரே இத் திருப்பணியைச் செய்யத் தகுந்தவரென்று தீர்மானித்து, பொருள் சேர்த்து, சகல சௌகரியங்களுடன் அவரைப் பிரயாணப்படுத்தி வைத்தார்கள். சுதேச மன்னர்களும் நிரம்பப் பொருளுதவி செய்தார்கள்.

சுவாமிகள் 1893-ம் வருஷம் மேமீ 31உ பம்பாயில் புகைக் கப்பல் ஏறி, கொளும்பு, பினங், சிங்கப்பூர், ஹாங்காங், ஜப்பான் வழியாய் அமரிக்காவை யடைந்து, முதலில் சர்வ தர்ம மகா சம்மேளனத்தில் ஹிந்து மதத்தின் பிரதிநிதியாகப் பிரசங்கிப்பதற்குச் சில இடையூறுகள் தோன்ற, அவற்றை

இறைவனருளாற் கடந்து, அமரிக்க பிரபல வித்துவான்களின் ஆதரவு பெற்று சர்வ தர்ம மகா சபையில் ஹிந்து மதத்தின் பிரதிநிதி ஸ்தாபனம் வகிக்க அனுமதி யளிக்கப் பெற்றார்.

சர்வதர்ம மகாசபை எவ்வாறிருக்கு மென்பதை சுவாமிகள் முன்பாக அறியாராதலின் அம் மகத்தான கூட்டத்தைக் கண்டவுடன் அவருக்குப் பேசக் கூச்சமாயிருந்தது. அதில் வீரத்துடனெழுந்து ஆணித்தரமாகப் பேசும் தைரியமும் அவருக்கு முதலில் ஏற்படவில்லை. அங்கு கூடியிருந்த மக்களனைவரும் மிகவும் ஆவலோடு சொற்பொழிவுகளைக் கேட்க நிர்சப்தமாக அமர்ந்திருந்தார்கள். இளவரசர்களைப் போல் கிறிஸ்தவ மதப்பிரசங்கிகள் உடைதரித்து மேடையில் வீற்றிருந்தனர். இவர்களிடையில் நமது இந்திய சந்நியாசி தமது சாதாரண உடையுடன் அமர்ந்திருப்பதை அவர்கள் உற்றுப் பார்த்தவண்ண மிருந்தார்கள். விவேகானந்த சுவாமிகள் இவற்றை யெல்லாம் பார்த்துக்கொண்டே, ஏனைய பிரதிநிதிகள் பேசுவதையும் கவனித்த வண்ணம், திவ்யத் தாயின் திருதாள்களைத் தியானித்தவாறு வீற்றிருந்தார். அவைத்தலைவர் அவரைப் பேசும்படி வேண்டும்போதெல்லாம் ஏதோ ஒருவிதக் கூச்சத்தால் அவர் 'பின்னாகட்டும்' என்று சொல்லிக் கொண்டே வந்தார். அன்று இடைவேளை போஜனமான பின், மறுபடியும் அனைவரும் கூடினர். இத் துறவி எழுந்து பேசமாட்டார் போலுமென்று அக்கிராசனாதிபதி நினைக்கும் வரையில் சுவாமிகள் மெல்ல போக்குச் சொல்லிக் கொண்டே வந்தார். அவ்வமயம் திடீரென்று ஒருவித சக்தி அவரை ஆட்கொண்டது. அவர் முன்பாக ஓர் ஜோதி தோன்றி அவரது கண்களுக்குள் நுழைந்தது. அவர் ஒருமுறை சபையோர்களைத் திரும்பிப் பார்த்தார்; அவரிடம் சப்த ரிஷிகளின் மகா தபோபல மெல்லாம் ஒன்று கூடிப்

பொலிந்தன. அவர் ஸ்ரீராம கிருஷ்ணரின் திருவடி நிழலில் வீற்றிருப்பதுபோல் விளங்கினர். வேதாந்த தாத்பரியங்கள் அவர் நாசியின் சுக்கில நாடி வழியே சஞ்சரித்தன. கம்பீர மாக சுவாமிகள் குதித்தெழுந்துநின்றார்; சாஸ்வதி தேவியை யொருமுறை தியானித்த வண்ணம் 'அமரிக்கா வாசிகளான எனது அன்பார்ந்த சகோதர சகோதரிகளே!' எனத் திரு வாய் மலர்ந்தார். இச் சொற்களைக் கேட்ட அக்கணமே சபையோர் கரகோஷம் செய்து அதிக உற்சாகத்துடன் குதித்துப் புகழுரை புகலவாரம்பித்தனர். அச் சபையோரின் குதூகல மடங்கக் கொஞ்ச நேரமாயிற்று. சாஸ்வதிதேவி அவர் வாக்கில் கோயில் கொண்டு விளங்கினள். 'ஆ என்ன! இதுவரையில் நம்மில் ஒருவரும், இதுவரை மேடையில் வந்தனுபசாரத்திற்கு உத்தரமாகப் பேச எழுந்த எவரும், சகோதரத்வத்தைப்பற்றி நினைத்தது மில்லையே' என்று சொல்லிப் பொங்கினர். "குயிலினு மினிய குர லுடன் பேசும் இத் தெய்வ புருஷன் யாரோ!" வென்று சிலர் பிரமித்தனர். "அவர் கம்பீரப் பார்வையே நம்மைப் பரவசமாக்கிவிட்ட" தென்றார் சிலர். எந்த பரம புருஷ னுடைய சங்கற்பத்தால் இவ்வவனியும், அதன்கண் ணுள்ள பலகோடி ஜீவராசிகளும் தோன்றி விளங்குகின்றனவோ, அந்த அகிலலோக காரணனை சர்வேஸ்வரன் அவரிடத்து அப்பொழுது சாந்நித்யமாயிருந்தார். சில நிமிஷங்களுக்குப் பிறகு இயற்கையாக அச் சபையின் உற்சாக கரகோஷங் கள் தணிந்தபின் சுவாமிகள் மேலே பேசத்தொடங்கினர்.

## சபை வணக்கம்

சகோதரிகளே! சகோதரர்களே!

நீங்கள் எங்களை முகமலர்ச்சியோடு ஏற்று உபசரித்த தற்காக நான் பிரதி வந்தனமளிக்க எழுங்கால் என் னுள்ளம்

அளவிட்டுரைத்தற்கரிய ஆனந்த மடைகின்றது. இவ்வுலகிற் றோன்றியுள்ள மஹான்களின் போரால் நான் உங்களுக்குப் பிரதி வந்தனஞ் செய்கின்றேன் ; சகல மதங்களுக்கும் எது தாய்மதமாக விளங்குகின்றதோ அம்மதத்தின் பிரதிநிதியாக நான் உங்களுக்கு வந்தன மளிக்கின்றேன். பல வகைச் சாதியினரும், சமயத்தினருமான பல கோடானு கோடி ஹிந்துமகா ஜனங்களின் பிரதிநிதியாக நான் உங்களைப் போற்றுகின்றேன்.

பூமியின் பல்வேறு திசைகளிலிருந்தும் இம் மகா சபைக்கு வந்து வீற்றிருக்கும் பலர் சர்வ மத சமாஸத்தைச் சார்ந்து சொற்பொழிவுகள் நிகழ்த்துவார்களென்றும், அப் பெரியார்கள் புறச்சமய தூஷணையின்றி, இதரமதக் கொள்கைகளையும் ஆதரித்துப் பேசுவார்களென்றும் எனக்கறிவித்த அன்பர்களுக்கு எனது மனமார்ந்த வந்தனம் உரியதாகும். நான் சகல சமயங்களையும் தழுவி ஞானமூட்டிய தாயகமான சமயத்தைச் சேர்ந்தவனென்ற உயர்வால் எனது உள்ளம் பூரிக்கின்றது. எங்களுடைய ஹிந்து சமய கிரந்தங்கள் வரையப்பெற்றுள்ள சம்ஸ்கிருத பாஷையில் 'எக்ஸ்க்ளுஷன்' (விலக்கு) என்ற சொல் இல்லாதிருத்தலினின்றும், எங்களுடைய சமயத்தினுயர்வை ஊகித்தறியலாம். நாவலன் தீவின் நாலாபக்கங்களினின்றும் மதக் கொடுமைகளால் துன்புறுத்தப்பட்டு தப்பியோடி வந்த மக்களைத்தாங்கி ஆதரித்த ஹிந்து சமயத்தைச் சார்ந்தவன் யான்! முன்னாட்களில் ரோமாபுரியில் ரோமர்களின் மதக் கொடுமைக் காற்றாது, தங்கள் ஆலயம் அழிக்கப்பட்ட பொழுது, தப்பியோடி எங்கள் தென்னாட்டை வந்தடைந்த யூதகுல திலகர்களை நாங்கள் பரிவுடனேற்றுபசரித்தோம். அடைக்கலமென்றடைந்த பாரசீக ஜரதஷ்டிர மதஸ்தர்களை அன்புடன் ஏற்று, அஞ்சேலென் றருளிய சமயம் எதுவோ

அதைச்சேர்ந்தவன் நான்! இப்பொழுது யான் எனது இளமை முதல் தினந்தோறும் அப்பியசித்துவருவதும் ஒவ்வொரு ஹிந்துவாலும் ஓதப்பட்டு வருவதுமான ஓரிய சுலோகத்தின் முதலிரண்டு அடிகள் எனது ஞாபகத்திற்கு வருகின்றன. கேளுங்கள்!

𑌰𑍁𑌚𑍀𑌨𑌾𑌂 𑌵𑍈𑌚𑌿𑌤𑍍𑌰𑍍𑌯𑌾𑌤𑍍 𑌋𑌜𑍁𑌕𑍁𑌟𑌿𑌲
𑌨𑌾𑌨𑌾𑌪𑌥𑌜𑍁𑌷𑌾𑌂 ।
𑌨𑍃𑌣𑌾𑌮𑍇𑌕𑍋𑌗𑌮𑍍𑌯𑌸𑍍𑌤𑍍𑌵𑌮𑌸𑌿𑌪𑌯𑌸𑌾𑌮𑌰𑍍𑌣𑌵 𑌇𑌵 ।*

'பல்வேறிடங்களி னின்றும் புறப்படும் நதிகள் வெவ்வேறு வழியோடிவரினும், அவை ஒரே கடலில் போய் சங்கமமாவதுபோல், அபிருசி வேறுபாட்டால் மக்கள் பற்றும் மார்க்கங்கள் வேறுபடினும், அவர்கள் முடிவில் உனது பொற்பாத கமலங்களையே அடைகின்றனர்' என்பதே.

ஸ்ரீமத் பகவத் கீதையில் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா அருளிச் செய்துள்ள,

𑌯𑍇 𑌯𑌥𑌾 𑌮𑌾𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇
𑌤𑌾𑌂𑌸𑍍𑌤𑌥𑍈𑌵 𑌭𑌜𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 ।
𑌮𑌮 𑌵𑌰𑍍𑌤𑍍𑌮𑌾𑌨𑍁𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇
𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃 ॥

---

*கல்லிடைப் பிறந்து போந்து கடலிடைக் கலந்த நீத்தம்
எல்லையில் மறைக ளாலு மியம்பரும் பொருளி தென்னத்
தொல்லையி லொன்றே யாகித் துறைதொறும் பரந்த சூழ்ச்சிப்
பல்பெருஞ் சமயஞ் சொல்லும் பொருளும்போற் பரந்த தன்றே.

என்னும் கம்பராமாயணம் பாலகாண்டம் ஆற்றுப்படலம் 19-ம் செய்யுள் இப்பொருள் பற்றி எற்றல் காண்க.

"பார்த்தனே! எவரெவர் என்னை எந்தெந்த விதமாக ஆராதித்தாலும் அவர்கள் மனோபீஷ்டப்படி நானவர்களை அடைகின்றேன்" என்ற மகாவாக்கியத்திற் கிலக்காக இம் மகாசபை விளங்குகின்றது. மதஸ்தர்களின் கக்ஷிபேதத்தாலும், மூடபக்தர்களின் கொடியமத வீராவேசத்தாலும் அன்பெனுஞ் சமயப் பெருமித மடியோடு வற்றி அவனியில் மிருகபலத்தின் எழுச்சியால் இரத்த வெள்ளம் பெருகலாயிற்று. இம் மதக் கொடுமைகளால் எத்தனையோ நாடுகள் அழிந்து, மக்கள் மாண்டு, நாகரீகம் நாசமாகி, சத்வகுணம் சங்கரிக்கப்பட்டு யாவு மலங்கோலமாயின. இத்தகைய விபரீதங்கள் நடைபெறாதிருக்குமேல் தேசங்கள் இக்காலத்தில் மகோந்நத நிலையை யடைந்திருக்கும். ஆனால் இம்மதாவேசத்திற்கு மரணகாலம் இப்பொழுது நெருங்கிவிட்டது. இன்றுகாலையில் இம்மகாசபை தொடங்குங்கால் அடித்த மணியே மதப்பேயின் மரணத்தை அறிவித்ததாகும். ஒரே பரம்பொருளை நாடிச்செல்லும் பல மதத்தினரும் இனி இத்தகைய தீங்குகளினின்றும் மீண்டு, சமரஸ பாவனையுடன், பரஸ்பர அன்புள்ளவர்களாய் வாழ இறைவன் அருள் புரிவாராக.

சுவாமிகளின் சொற்பொழிவு அன்று மிகவும் சிறிதானதாகவே யிருந்தாலும் அதன் மகிமையையும் உயர்வையும் எவராலும் எடுத்தெழுதவியலாது. ஏனைய சமயாநுசாரிகள் தத்தம் சமயக்கோட்பாடுகளை வலியுறுத்திப் பேசி முடித்த பின்னர், சுவாமிகள் வையகத்துள்ள சமயங்களை யெல்லாம் சமரஸப்படுத்திக் காட்டி அவற்றின் எல்லை யொன்றே யென்று விளக்கிப் பேசியதை எவர்தான் புகழ வல்லார்? ஏனைய சமயவாதிகள் தத்தம் சமயக் கொள்கைகளை ஆங்கு கூடியிருந்த மகா ஜனங்களுக்கு எடுத்துரைத்தனர். ஆனால் விவேகானந்த சுவாமிகளோ அவர்கள் இதயத்தில் ஞான

விளக்கேற்றினர். அன்றைய கூட்டம் குதூஹலமாக 'இவரே அவதார புருஷர்! இவரே மஹான்! ஞானசாரியன்!' என்று அனைவரும் போற்ற முடிவடைந்தது.

1893-ம் ஸு செப்டேம்பர்மீ 15-ம் ௳ வெள்ளிக் கிழமை பிற்பகலில் கூடிய சர்வ தர்ம மகா சபையின் ஐந் தாம் நாள் கூட்டத்தில், பல்வேறு மத சித்தாந்திகளும் பேசி முடித்த பின்னர் சுவாமிகள் கரகோஷத்தினிடையே எழுந்து பின்வருங் கதையைச் சொல்லி அனைவரையும் மகிழ்வித்தார்.

அன்பர்களே!

ஒரு சிறு கதை சொல்லவே யான் இப்பொழுது முன் வந்துளேன். இதுவரை பிரசங்கித்த அன்பர்கள் புறமத இகழ்ச்சியை யொழித்துவிட வேண்டுமென்று வலியுறுத் திப் பேசினர்கள். அவர் சொற்பொழிவுகளி னின்றும் மதானுசாரிகளுக்குள் ஏற்பட்டுள்ள மனஸ்தாபத்தைப் போக்கவேண்டு மென்பது பெறப்பட்டது. மதபேதத்திற் குக் காரணமாயுள்ளதெது வென்பது பின்வருங் கதையால் விளங்கும்.

### சர்வ சமய சகோதரத்துவம்.

வெகு காலமாக ஒரு கிணற்றில் ஒரு தவளை வசித்து வந்தது. அத்தவளை அக்கிணற்றிலேயே பிறந்து வளர்ந்து வந்தபோதிலும் அதன் சரீரம் எவ்வித வளர்ச்சியையு மடை யாது ஒரேவிதமா யிருந்துவந்தது. அக்காலத்தில் நிகழ் காலத்தி லுள்ளதுபோல் நவீன வளர்ச்சி வாதிகள் ஒரு வருந் தோன்றாமையால் பிறந்தது முதல் அக்கூவலைவிட்டு வெளிவாரதிருந்த அந்தத் தவளை, கண்பார்வை பெற்றிருந் தும் பெற்றதா லடையும் பயனென்றையு மடையவில்லை.

தற்கால கிடைத்தத்துவ விற்பன்னர் அடைகின்ற அத்துணை மகிழ்ச்சியை அத்தவளையும் அக்கிணற்றிலிருந்த புழுக்களைத் தின்று அனுபவித்து வந்தது. இவ்வாறிருக்கும் நாளில் கடலில் வசிக்குந் தவளையொன்று யதேச்சையாக அக்கிணற்றை வந்தடைய, அதனை அதிசயத்துடன் நோக்கி, இத்தவளை "நீ எங்கிருந்து வந்தனை!" என்று கேட்டது. அக்கடற்றவளையும் 'கடலிலிருந்து' என்று விடை யளித்தது. கடலென்ற சொல்லைக் கேட்ட கிணற்றுத் தவளை உடல் மயிர் பொடிப்ப ஆச்சரியத்துடன் "கடலென்ன இவ்வளவு பெரியதா யிருக்குமா?" என்று அக்கூபத்தின் ஒரு ஓரத்திலிருந்து மற்றொரு ஓரத்திற்குத் தாவிற்று. கடற்றவளை 'இதென்ன விந்தை! இச் சிறு கிணற்றைச் சமுத்திரத்திற் கொப்பிடுவ தெப்படி?" என, கிணற்றையன்றி வேறொன்றையுங் கண்டறியாத அக்கூபத்தவளை, மற்றொரு முறை குதித்து 'இவ்வளவு பெரிதாயிருக்குமா?' என்று கேட்டதாம். சமுத்திரத் தவளை 'அறிவீனம் முற்றிய நீ சமுத்திரத்தைக் கிணற்றுக் கொப்பிடுவ தெவ்வாறு ஒக்கும்?' என, அக்கிணற்றுத்தவளை கோபத்துடன் "எனது கிணற்றை விடப் பெரிதான தொன்றும் இருக்கமுடியுமா? இவன் பெரும் பொய்யன், இவனை விரட்டுங்கள்" என்று கூறிற்றாம். சகோதரர்களே! இந் நிலையிற்றாம் நாமித்துணை காலமா யிருந்து வந்தோம்! ஹிந்து மதத்தைச் சார்ந்த யான் எனது இந்தியாவாகிய சிறு கிணற்றி லிருந்துகொண்டு, அதுவே பிரபஞ்சம் என்றும் அதற்கு ஒப்பானதும் மிக்கதுமில்லை யென்றும் நினைக்கின்றேன்; அவ்விதமே கிறிஸ்துவ ரொருவரும் அவரது நாடாகிய சிறு கிணற்றிலிருந்து அதுவே உலகமென்று எண்ணுகின்றார். முகம்மதியரும் அவ்விதமே தமது கிணற்றைவிடப் பெரியது வேறில்லை யென்று கருதுகின்றார்.

ஆதலால். அமரிக்கா நாட்டு அன்பர்களே! இம் மத வளர்ச்சிக்குரிய இடையூறுகளைப் போக்கி சர்வதர்ம சமரஸ பாவனையைப் பெருக்கத் தாங்கள் கொண்டுள்ள முயற்சி திருவினையாமாறு நான் இறைவனது திருவருளை பிரார்த்திக் கின்றேன்.

இக்கதையால் சுவாமிகள் அங்கு கூடியிருந்த மகா ஜனங்களைக் களிப்பித்தார். அன்றுமுதல் அமரிக்கா நாடெங் கணும் விவேகானந்த சுவாமிகளைப் பற்றிப் பத்திரிகைகள் புகழ்ந்தெழுத வாரம்பித்தன; விவேகானந்த சுவாமிகளின் பிரசங்கத்தைமட்டும் கேட்க வேண்டுமென்ற அவாவுடன் பலர் அம்மகாசபைக்குத் திரள் திரளாக வர ஆரம்பித்னர். அமரிக்கா நாட்டு அறிவாளிகளின் நாவிலெல்லாம் சுவாமி கள் கலைமகள் போன்று விளங்கினர். இங்ஙனம் சுவாமிகள் **'சர்வதர்ம மகாசபை'** யின் பூர்வாங்கத்தில் இருமுறை பேசி னர். அப்பால், சர்வ தர்ம மகாசபையின் ஒன்பதாம் நாள் **'ஹிந்து மதம்'** என்பது பொருளாக ஒரு உபந்நியாசஞ் செய் தார்.

——

16

## ஹிந்துமதப் பிரசங்கம்

சுவாமிகள் 1893-ம் ஹூ செப்டெம்பர் மீ 17-உ ஞாயிற்றுக் கிழமையாகிய ஒன்பதாம் நாள் சர்வ தர்ம மகா சபை கூடியபொழுது செய்தருளிய உபந்நியாசம் பின் வருமாறு:

சகோதரர்களே! சகோதரிகளே!

சரித்திர ஆதாரத்துடன் கால வரையறை கண்டுரைக்க வியலாத தொன்மைபெற்று விளங்கும் சமயங்கள் மூன்று. அவை, 'ஹிந்துமதம்,' பாரசிகர் சமயமான 'ஜாதஷ்டிர மதம்,' 'யூதமதம்' ஆகிய மூன்றேயாகும். இம் மூன்று சம யங்களும் பயங்கரமான ஆபத்துக்கள் பல நேர்ந்தும், தமது அஸ்திவாரபலத்தால் அவ் வாபத்துக்களை யெல்லாமெதிர்த்து வெற்றிவாகை சூடி விளங்குகின்றன. யூத மதம் கிறிஸ்து சமயத்தைத் தன்னுள்ளடக்கிக் கொள்ளச் சக்தியில்லாமல் தனது ஜன்ம பூமியினின்றுந் துரத்தப்பட்டது. தற்கால முள்ள சில நூற்றுக்கணக்கான பாரசீகர்களே ஜாதஷ்டிர மதத்தின் அடையாளமாக விளங்குகிறார்கள். இவற்றின் நிலை யிவ்வாறாக, ஹிந்து மதத்தின் நிலையென்ன வென்பதை யாராய்வோம். பாரத நாட்டிலோ, மிக்கப் புராதனமான வேத மார்க்கத்தை வேரோடு பெயர்த்தெறிய அநேக சமய பேதங்கள் ஒன்றின் பின் னொன்றாகத் தோன்றியும், மிக்க பயங்கரமான பூகம்பத்தில் சற்று பின்வாங்கிப் பின்பு முன் னிலும் பன் மடங்கு வேகத்துடன் யாவற்றையும் கவர்ந்து கொள்ளும் சக்தியோடு கூடி எதிர்த்துவரும் கடல்போல் வேதமதம் முதலிற் சற்று பின் வாங்கினபோதிலும்,பின்னர் வன்மையுடனெழுந்து கொடிப்பொழுதில் அம்மத பேதங் களைத் தனது அருட்பார்வையால் வென்று அடிமையாக்கி

விளங்கிற்று. இந்தியாவில், துவைதிகள் முதல், அஞ்ஞேய வாதிகளான பௌத்தர்கள், நாஸ்திக வாதிகளான ஜைனர்கள், தாழ்ந்த விக்கிரஹ ஆராதனை செய்கின்றவர்கள் வரையில் யாவருக்கும், பல்வகைப் புராணக் கதைகளுக்கும் எங்களுடைய ஹிந்துமதம் தாயகமாகத் திகழ்கின்றது. ஐரோப்பிய விஞ்ஞான நூல்களால் நிகழ்காலத்தில் கண்டுபிடிக்கப் பட்டிருப்பவையாவும் ஹிந்துமதத்தின் குழந்தைகளென்றே கூறலாம். சைவம், வைணவ முதலான சகல மதங்களுக்கும் ஆதாரமாயிருப்பது ஹிந்து மதந்தான். இவர்கள் எல்லோரும் வேதத்தையே பிரமாணமாகக் கொண்டாடுகிறவர்கள். இனி வேதமென்பது என்னவென்று கூறுகின்றேன்.

## வேதம்.

வேதம் அநாதியானது. ஒரு புத்தகத்திற்கு முதலும் முடிவுமில்லை யெனல் எவ்வாறு பொருந்துமென்று நீங்கள் வினவலாம். வேதமென்பது ஒரு ஆசிரியரால் வரையப் பெற்ற நூலன்று. பல மஹரிஷிகள் ஈஸ்வர சம்பந்தமாக இயற்றிக் கண்டுணர்ந்த அநுபவநிதியே வேதமெனப்படும். பூமிக்கு இயற்கையாயுள்ள, ஆகர்ஷண சக்தி, முதல் முதல் உண்டானகாலம் இது என்று நாம் கண்டுரைத்தல் முடியாத காரியம். அச்சக்தியை நாமறிந்த பின்னரும் பூமி இழப்பதில்லை. இவ்வுண்மையைச் சமீபகாலத்திலேதான் தத்துவ ஞானிகள் கண்டறிந்தனர். அதுபோலவே வேதமுண்டான காலமிதுவெனக் குறிக்க எவராலு மியலாது. இவ்வாறே ஜீவான்மாவும் பரமாத்மாவும் ஒன்றே யென்ற உண்மை உள்ள காலம் இன்றல்ல, நேற்றல்ல. இந்த உண்மைகள் நாம் மறந்து விடினும் அவை ஒன்றேயாகி என்றும் விளங்குவன. இவ்வேத விதிகளை வெளியிட்டவர்கள் மகரிஷிகள். அவர்கள் சந்ததியிற் பிறந்த நாங்கள்

அவர்களைப் பரிபூர்ண ஞானசித்தி யடைந்த மஹான்க ளென்று போற்றுகின்றோம். அவர்களுள் மகோந்நத நிலை யில் விளங்கியவர்களிற் சிலர் பெண்பாலென்று கூற வெழுங்கால் என் உள்ளம் உவகையால் பூரிக்கின்றது.

நான் சற்றுமுன் வேதம் அநாதியானதென்று கூறிய தற்கு அவை அழிவற்ற சம்பந்த முடையனவாய், பெருகு வன வாதலின் முடிவில்லாதிருக்கலா மானாலும், ஆரம்ப மில்லை யென்பது எவ்வாறு பொருந்துமென்ற ஆசங்கை யுண்டாகலாம். வேதத்தில் சிருஷ்டிக்கு எவ்வித ஆதியுமில்லை, முடிவுமில்லை யென்று கூறப்பெற்றுளது. தற்கால ஐரோப் பிய விஞ்ஞான சாஸ்திரிகளே மிதை ஆமோதித்தே உலக சக்தித்திரளானது ஏற்றக் குறைவுபாடின்றி எக்காலும் ஒரே அளவுள்ளதென்று கூறுகின்றனர். ஆதலின் ஒன்றுமே யில்லாத காலமொன் றிருந்திருக்குமானால், அப்பொழுது இவ்வித வேறுபாடுகளைத் தோற்றுவிக்கும் பிராணசக்தி எங்கே யிருந்தது? சிலர் அவ்யக்த பரப்பிரம்ம வடிவாக இருந்ததென்பர். அவ்வாறாயின் அவ்யக்த பரப்பிரம்மத்திற் குச் சிலகாலம் அவ்யக்தமாகவும், சிலகாலம் வியக்தமாகவும் விவகரிக்கும் நிலைபேதங்க ளுண்டென் றேற்படுமன்றோ? நிலை மாறுபடுந் தன்மை பரப்பிரமத்திற் குண்டெனில் அது இயற்கையினின்று மாறுபட்டதாய், செயற்கையானதாகி அழிவென்னும் முடிவை யடையவேண்டுமல்லவா? இத னல் பரப்பிரம்மத்திற்கு அழிவுகால மொன்றுண்டு என்றல் லவா ஏற்படும்? ஆனதுபற்றி சிருஷ்டிக்கு ஆதியுமந்தியமு மில்லை யென்பது ஹிந்துக்களின் கொள்கை. இவ்வுண் மையை உதாரணத்துடன் விளக்குவேன். சிருஷ்டி, சிருஷ்டி கர்த்தா ஆகிய இவ்விரண்டையும் முதலும் முடிவுமில்லா இரண்டு சமனுரை ரேகைகளுக்கு ஒப்பிடுங்கால் சிருஷ்டி

கர்த்தாவாகிய கடவுள், சக்தி சொரூபியாயும் நியந்தாவாயுமிருந்து, தமது சக்தியால் ஊழிக்காலத்தில், பிரளய சமுத்திரத்தினின்றும் சூர்யன், சந்திரன், நக்ஷத்திரங்கள், பிரபஞ்சம் முதலிய பிரம்மாண்டங்களைச் சிருஷ்டித்துக் காத்துப் பின்னர் அழித்துவிடுகின்றார். இவ்வாறு எப்பொழுதும் நடைபெற்றுக்கொண்டே யிருக்கிறது. இதை ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பிராம்மணச் சிறுவனும்,

"ஸூர்யா சந்த்ரமஸௌ தாதா யதா பூர்வ
மகல்பயத்"

(கடவுள் சூர்ய சந்திரர்களை முன்போலவே படைத்தார்) என்ற சுலோகத்தால் அத்யயநம் பண்ணுகிறான். ஐரோப்பிய விஞ்ஞானிகளு மிதை ஆமோதிக்கிறார்கள்.

## நித்திய வஸ்துவின் இலக்கணம்

நான் இங்கே நிற்கிறேன்; எனது கண்களை மூடிக்கொண்டு 'நான் நான் நான்' என்று எனது ஸ்திதியைப் பற்றி நினைக்கும்போது எனக்குண்டாகும் எண்ணமென்ன? கேவலம் சரீரத்தின் பாவனையே யல்லவா? அப்படியானால், நான் சடப்பொருள்களாலான அசேதனப் பொருளேயன்றி விசேஷமான வேறெதுவு மல்லனோ? அதற்கு வேதம் என்னைச் சடப்பொருளின் சேர்க்கையல்ல வென்கின்றது. 'நான்' என்பது இத்தேகத்துள் நிவசிக்கும் ஆத்மா; 'நான்' இச்சரீரமல்லன்; இவ்வுட லழிந்துபோம்; நானோ என்றும் அழியமாட்டேன்; நான் இப்பொழுது இங்கே இந்த சரீரத்தி லிருக்கிறேன்; இது அழிந்த பின்னரும் இருந்துகொண்டே யிருப்பேன். இந்த உடலை யடைவதற்கு முன்பும் 'நான்' இருந்தேன். ஆன்மா சிருஷ்டிக்கப்பட்டதன்று. ஏனெனில், சிருஷ்டி யென்பதற்குச் சேர்க்கை யென்பது

பொருள், அச்சேர்க்கைப் பொருள் நிச்சயமாக என்றாகி லும் அழியவே வேண்டும். ஆதலின் ஆத்மாவென்பது சிருஷ்டிக்கப்பட்ட வஸ்துவானால் உறுதியாக அழியவேண்டி யதுதான். சிலர் பிறவியில் சுகங்களையே யனுபவிக்கின்ற னர்; சிலர் பூர்ண தேகாரோக்யம், அழகமைந்த மேனி, மனோவலிமை முதலியவற்றுடன் எவ்விதக் குறைவுமின்றி பாக்கியவந்தர்களாகப் பிறக்கின்றனர். வேறு சிலர் நிர்ப் பாக்கியர்களா யுழலுகின்றனர். சிலர் அங்கஹீன முற்றும், பின்னுஞ் சிலர் மந்த புத்தி யுள்ளவர்களாயுந் தோன்றி கஷ் டப்படுகின்றனர். அவர்கள் அனைவரும் படைக்கப்பட்ட வர்களானால் நியாயவானும் கருணாநிதியுமான சர்வேஸ்வரன் அத்தனை பக்ஷபாதமாக ஒருவனைச் சுகியாகவும் மற்றொருவ னைத் துக்கியாகவும் படைப்பானேன்? இதற்கு, 'இந்தப் பிறவியில் துக்கப்படுவோர் மறுபிறப்பில் சுகத்தை யனுப விப்பர்' என்பதும் தக்க சமாதானமாகாது. நியாயமூர்த்தி யும் கருணாகரனுமான கடவுளின் சந்நிதானத்தில் எனிப் பிறவியிற்கூட ஒருவன் நிர்ப்பாக்கிய னாகவேண்டும்?

இரண்டாவதாக சிருஷ்டிகர்த்தா - கடவுள் என்னும் கொள்கைப்படி, இந்த விஷயத்திற்குத் தக்க சமாதானங் கூற வியலவில்லை. ஏனெனில் சர்வவல்லமையுள்ள ஒருவ ருடைய கொடூரச் செய்கைகளையே அக்கொள்கை தெரிவிக் கும். ஆகவே, ஒருவன் இன்பத்தையோ அல்லது துன்பத் தையோ அடைவதற்குக் காரணம் அவன் பிறந்ததற்கு முன்பிருந்தே இருந்திருக்க வேண்டும். அவை தாம் அம் மனிதனுடைய பூர்வஜன்ம கர்மாக்கள் (வினைகள்) எனப் படும். மனிதனுடைய பலவிதமான மனோபாவங்களுக்கும், தேகக் கூறுக்கும் அவனது பரம்பரை வாசனையே காரணமா யுள்ளன வல்லவா? என்றால், இங்கே ஜடத்தைப்பற்றியும் சைதன்யத்தைப் பற்றியுமான இரண்டு நிலைகள் உள்ளன.

## சேதனப் பொருளின் பரம்பரை வாசனை.

ஜடமும், அதன் விகாரங்களும், நமது காரியங்களுக்கெல்லாம் காரணமாகுமானால், ஆன்மா வென்பது இருப்பதாகக் கொள்ளவேண்டிய அவசியமேயில்லை. ஆனால், ஜடப்பொருளினின்றும் சைதந்ய சக்தி யுண்டாயிற்றென்று நிரூபிக்க முடியாது. ஆனதுபற்றி, ஒரு தனிமையுள்ள ஜடப்பொருளிலிருந்து சகல சிருஷ்டிகளும் ஏற்பட்டனவென்று கொள்ளத் தேவையானால், ஒரே மூலசைதந்யத்தி லிருந்து பிரபஞ்சமனைத்தும் உற்பவித்ததென்று கொள்வது அவசியமான முடிபாகவும், யுக்திக்குப் பொருந்தியதாயும், அனைவராலும் ஏற்கத்தக்கதாயு மிருக்குமன்றோ? ஆனால், இவ்விஷயத்தைப்பற்றி இப்பொழுது ஆராயவேண்டிய அவசியமில்லை. சில சரீர சுபாவங்கள் பரம்பரையாக வந்தனவென்பதையும் நாம் மறுக்க முடியாது. சரீர சுபாவங்கள் ஒருவகையில் ஆன்மாவுக்கு மட்டும் அதன் இயல்பிற் குரித்தான ஒருவழியில் துணைபுரிவதற்குப் பொருந்தியதாம். ஆன்மாவையே பொறுத்த சில சுபாவங்கள் அதன் முன் வினையினால் ஏற்படுகின்றன. ஒருவித சுபாவத்தையுடைய ஆன்மா அச்சுபாவத்தை வெளியிடக்கூடிய தகைமையுடைய சரீரத்திலேயே,

"யோக்யம் யோக்யேந யுஜ்யதே"

"இனம் இனத்துடன் சேரும்"

என்னும் இனமுறை விதிக்குத் தகுந்தபடி பிறவி எடுக்கின்றது. இது சாஸ்திர சம்மதமானதாயு மிருக்கிறது. எவ்வாறெனில், விஞ்ஞான சாஸ்திரம் ஒவ்வொன்றிற்கும் பழக்கமே காரணமென்று கூறுகின்றது. அப்பழக்கமோ ஒருமுறை செய்ததைத் திரும்பத் திரும்பச் செய்வதால் உண்டாகின்றது. ஆதலால், புதிதாகப் பிறந்த குழந்தையி

னுடைய சுபாவமான பழக்கமும் அது திரும்பத் திரும்பச் செய்த கருமத்தின் பலனேயாகும். அச்சுபாவங்கள் அக் குழந்தைக்கு இப்பிறவியில் ஏற்பட்டிருக்க முடியாது. ஆக, அவை பூர்வ ஜென்மங்களிலிருந்தே தொடர்ந்து வந்திருக்க வேண்டும்.

இதுவரையில் நான் மொழிந்தவை யாவும் ஒப்புக் கொள்ளப்பட்டாலும் சிலர் வேறு சில ஆக்ஷேபனைகள் செய்யலாம். அதாவது எனது பூர்வஜன்ம விஷயங்களில் ஏன் இப்பொழுது கொஞ்சங்கூட எனது ஞாபகத்திற்கு வரவில்லை? என்பதே. இதைச் சுலபமாக விளக்கிவிடலாம். நான் இப்பொழுது ஆங்கிலத்தில் பேசிக்கொண் டிருக்கி றேன்; அது எனது தாய்மொழியல்ல; உண்மையில் எனது தாய் மொழியின் ஒரு வார்த்தைகூட இப்பொழுது எனது ஞாபகத்திலில்லை. ஆனல் நான் அப்பதங்களை மெல்ல நினைக்க வாரம்பித்தால் அவை உடனே உதிக்கின் றன. இதனல் ஞாபகமென்பதும் மனமேயென்றும், அம் மனம் ஒரு சமுத்திரத்தைப் போன்றதென்றும் அக்கட லின் ஆழ்ந்த அடிப்பாகத்தில் நமது அனுபவங்களான ஞானமெல்லாம் அடங்கி யுள்ளன வென்றும் புலனும். பாடு பட்டு முயன்றால் அவை மேலே வரும். அம்முயற்சியின் பயனுகப் பூர்வஜன்மத்தின் அனுபவங்களும் இப்பொழுது ஞாபகத்திற்குக் கொண்டுவரப் படக்கூடும்.

## நடந்து போனவற்றை நினைவுக்குக் கொண்டுவரல்.

இது பூர்வஜன்ம சம்பந்தத்தை நேரில் நிரூபிக்கக்கூடிய பிரமாணம். பிரத்யக்ஷ அனுபவமே எந்த விஷயத்தையும் நிரூபிக்கச் சிறந்த பிரமாணமாகும். ஆதலின் இதோ எங்கள் மூதாதையர்களான மகரிஷிகள் உலகமறியச் சாற்றும் வீர வசனங்களைக் கேட்பீர்களாக: 'சமுத்திரத்தில் ஆழ்ந்து

மறைந்துகிடக்கும் பூர்வ ஞானங்களை யெல்லாம் அடியோடு கலக்கி மேற்கிளப்பக்கூடிய ரகசியங்களை யாங்கள் கண்டு பிடித்திருக்கிறோம். இந்த ரகஸியங்களை அனுசரித்து வருவீ ராயின், உமது பூர்வஜன்ம ஞாபகமெல்லாம் உமக்கு இப் பிறப்பிலுதிக்கும்' என்பது.

ஆனதுபற்றியே ஹிந்துமதஸ்தன் தன்னை ஓர் ஆத்மா வெனக் கருதுகின்றான். "அந்த ஆன்மாவை ஆயுதம் சிதைக்க முடியாது; நெருப்பு எரிக்க வியலாது; தண்ணீர் கரைக்க முடியாது; காற்று உலர்த்த முடியாது."

𑌨𑍈𑌨𑌂 𑌛𑌿𑌨𑍍𑌦𑌨𑍍𑌤𑌿 𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌨𑍈𑌨𑌂 𑌦𑌹𑌤𑌿 𑌪𑌾𑌵𑌕𑌃 ।

𑌨 𑌚𑍈𑌨𑌂 𑌕𑍍𑌲𑍇𑌦𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑌾𑌪𑍋 𑌨 𑌶𑍋𑌷𑌯𑌤𑌿 𑌮𑌾𑌰𑍁𑌤𑌃 ॥

(கீதா 2-23)

ஒவ்வொரு ஆன்மாவும் வட்டமென்றும், அவ்வட்டத் தின் சுற்றுக்கோடு இன்னவிடத்தில் உள்ள தென்று கூற முடியாதென்றும், அதன் மத்தியஸ்தானந்தான் ஆன்மா தங்கியிருப்பதான இடமென்றும், அம்மத்தியஸ்தானத்தின் கண்ணுள்ள ஆன்மா ஒரு தேகத்தினின்று மற்றொருதேகத் திற்கு மாறுவதுதான் மரணமென்றும் ஹிந்துக்கள் நம்பு கிறார்கள். அந்த ஆத்மாவானது ஜடத்தின் நிலைகளுக்குக் கட்டுப்பட்டதன்று; அது இயற்கையாகவே பாசபந்தமற்ற சுத்த சுதந்திர நிர்மல பரிபூர்ணத் தன்மையுடையது; ஆனால் அது எக்காரணம் பற்றியோ ஜடப்பொருளோடு கட்டுண்டு தன்னையும் ஜடமென்றே கருதுகின்றது.

விசுத்த பரிபூர்ண விமுக்த ஆத்மாவானது இவ்விதம் ஜடத்திற்கு அடிமையாகக் காரணமென்ன? ஒரு பரிபூர்ண ஆன்மா தான் அபூர்ணமானதென்று புத்தி மயங்குவது எக்

காரணம்பற்றி? ஹிந்துக்கள், இவ் வினுக்களுக்கு விடை பகராமல் மெல்லத் தப்பித்துக்கொள்வதன் பொருட்டு, 'இவ் விதக் கேள்விகளுக்கு இடமேயில்லை' யென்று சொல்வதாக நாம் கேள்விப்பட் டிருக்கிறோம். இதற்கு தத்துவ ஞானி களிற் சிலர், ஆன்மா ஜீவன் என்னும் இரண்டி னிடையே பூர்ண கல்ப சத்துவத்தை யுடையாராக வெகு சிலருள ரென 'விக்ஞான கடின பரிபாஷையால் மறுமொழி புகல முயலுகின்றனர். இவ்வித பரிபாஷைப் பதங்கள் எவ்வித சமாதானத்தையும் தாரவாம். ஆக அக்கேள்விக்கு இன்னும் விடையளிக்கப்படவில்லை. சர்வபரிபூர்ணவஸ்து எங்ஙனம் தன்னியற்கையில் அணுவளவேனும் குறைவடையும்? ஹிந்து மதஸ்தனே இவ்விஷயத்தில் மிக்க யதார்த்தவாதி யாவான். விதண்டாவாதத்தால் இவ்விஷயத்தை நிலைநாட்ட அவன் மனம் துணிவதில்லை; திடமான ஆண்மையோடு அவனிதற்கு விடையளிக்க முன் வருகின்றான். முதற் கேள்விக்கு அவன் சொல்லும் விடை யென்னை யெனில் "எனக்குத் தெரியாது" என்பதே. பரிபூர்ண வஸ்துவான ஆன்மா தன்னைக் குறைவுபட்ட பொருளென்றும், ஜடத் துடன் கூடி, அதனால் பந்தத்திற்கு ஆளாக்கப்பட்டுள்ள வஸ்துவென்றும் எண்ணும்படி எப்படி நேர்ந்ததோ யானறி யேன். ஆனால் உள்ளது உள்ளதே. ஒவ்வொரு மனிதனும் உடலே உயிரென்று எண்ணுகிறான். 'நான்' அல்லது என் ஆத்மா எவ்வாறு ஏன் இச்சரீரத்தை வந்தடைந்தது? என்ப தற்குச் சமாதானங்கூற ஹிந்துக்கள் யத்தனிப்பதில்லை. அது ஈஸ்வரசங்கல்ப மெனினும் பொருந்தாது. 'எனக்குத் தெரி யாது' என்று சொல்வதைப் பார்க்கிலும் மேலான சமா தான மொன்றில்லை.

## ஆன்மா நித்தியமானது.

ஆகவே, மனிதனது ஆன்மா அநாதியானது ; அழிவற்றது ; பூரணமானது ; எல்லையற்றது ; அது ஒருடலை விட்டு மற்றொரு உடலையடைதலே மரணமெனப்படும். முன் செய்த இருவினைகளால் நம்முடைய நிகழ்கால நிலையும், இப் பிறவியிற் செய்யும் வினைகளால் எதிர்கால ஸ்திதியும் கணிக்கப்படும். ஆன்மாவானது ஜனன மரண சக்கரத்தில் முறைப்படி சுழன்றுகொண்டே யிருக்கும். வலுத்த புயற்காற்றிலகப்பட்ட ஒரு நாவாய் ஒரு க்ஷணகாலம் கொந்தளிக்கும் கடலின் அலைகளாற் றாக்கி யுயர்த்தப்பட்டுப் பின் நிமிஷத்தில் மிக்கப் பள்ளமான மடுவில் அழுத்தப்படுவதுபோல், ஆன்மாவும், நல்வினை தீவினைகளின் வசப்பட்டு, அங்குமிங்கும் புரண்டுழன்று, எதற்கும் பணியாது. எப்பொழுதும் கல்லோலமிட்டுப் பாயும் காரண காரியப் பிரவாகத்தி னிடையே அகப்பட்டுத் தத்தளித்து நிக்கற்று, வலிமையற்று, திகைக்கும் படகை யொத்திருக்கின்றது ; தன்வழியிற்படும் எதையும் மடக்கிக்கொண்டு கணவனை யிழந்த கைம்பெண்ணின் கண்ணீரையும், பெற்றோரற்ற குழந்தைகளின் இரங்கலையுங் கண்டு விலகிச் செல்லாமல் சுழன்றோடிக்கொண்டேயிருக்கும் கர்ம சக்கரத்தின் கிழகப்பட்டுத் தவிக்கும் புழுவென்றும் அவ்வாத்மாவை யழைக்கலாம். இதனை நினைக்கும்போதே என் உள்ளம் கலங்குகின்றது ? எனினும் பிரகிருதி ஏற்பாடு அவ்வாறிருக்கிறது. "ஆனால் இதற்கு வேறு ஆறுதலில்லையா ? இத்துன்பத்தினின்றும் தப்பிப்பிழைக்க உபாயமேதுமில்லையா ?" என்ற இரக்கமொழிகள், உழலும் மனத்தின் உள்ளகத்திலிருந்து கிளம்பிற்று. அவ்வொலி கருணாநிதியான கடவுளின் சிம்மாஸனத்தை எட்ட, அங்கிருந்து ஆறுதலளிக்கும் அபயமொழிகள் ஓர் வேதகால மக

ரிஷியின் மனத்திடத்தே வந்திறங்கின. அவர் ஆன்மகோடி களின் முன்னாக எழுந்து கம்பீரமாக உரக்க வெளியிட்ட செய்தியாவது :

𑌶𑍃𑌣𑍍𑌵𑌨𑍍𑌤𑍁 𑌵𑌿𑌶𑍍𑌵𑍇 𑌅𑌮𑍃𑌤𑌸𑍍𑌯 𑌪𑍁𑌤𑍍𑌰𑌾
𑌆 𑌯𑍇 𑌧𑌾𑌮𑌾𑌨𑌿 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌨𑌿 𑌤𑌸𑍍𑌥𑍁𑌃
𑌵𑍇𑌦𑌾𑌹𑌮𑍇𑌤𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌮𑌹𑌾𑌨𑍍𑌤𑌮𑍍
𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌵𑌰𑍍𑌣𑌂 𑌤𑌮𑌸𑌃 𑌪𑌰𑌸𑍍𑌤𑌾𑌤𑍍
𑌤𑌮𑍇𑌵 𑌵𑌿𑌦𑌿𑌤𑍍𑌵𑌾𑌤𑌿𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑍇𑌤𑌿
𑌨𑌾𑌨𑍍𑌯𑌃 𑌪𑌨𑍍𑌥𑌾 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇𑌽𑌯𑌨𑌾𑌯

"ஹே! அழிவற்ற ஆனந்த சொரூபத்தின் குழந்தைகளே! வானுலகிலு முள்ளவர்களே! கேளுங்கள்; யான் மோக்ஷ ஸ்தானத்தைக் கண்டறிந்து கொண்டேன். அந்த காரத்துக்கப்பால் ஜகஜ்யோதியாய் சூர்யனைப்போல் சுவயம் பிரகாசமாய் விளங்கும் மாயாதீதப் பழம்பொருளான மகா புருஷனைக் கண்டேன். அவ்வறிவான தெய்வத்தை அறி வதால் மட்டும் நீ மரணத்தினின்றும் மீட்சிபெறலாம். பர கதியடைய வேறு எவ்வித வழியுமில்லை" என்பதே.

'அழிவற்ற ஆனந்தசொரூபத்தின் குழந்தைகளே!'— என்பது....ஹா! எவ்வளவு மதுரமும் அபயப்பிரதானமும் நிறைந்ததா யிருக்கின்றது! சகோதரர்களே! அந்த மதுர மான காமத்தால் உங்களை யான் அழைக்க எனக்கு அனு மதி யளிக்கவேண்டும். ஹிந்துமதஸ்த னெவனும் உங்களைப் பாவிகளென் றழைக்கச் சிறிதும் உடன்படான்.

𑌅𑌹𑌂𑌦𑍇𑌵𑍋𑌨𑌚𑌾𑌨𑍍𑌯𑍋𑌸𑍍𑌮𑌿
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵𑌾𑌹𑌂𑌨𑌶𑍋𑌕𑌭𑌾𑌕𑍍
𑌸𑌚𑍍𑌚𑌿𑌦𑌾𑌨𑌨𑍍𑌦𑌰𑍂𑌪𑍋𑌹
𑌂𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌵𑌾𑌨𑍍 ॥

## ஈஸ்வரனின் சந்தானங்கள்

நீங்களும் ஈஸ்வரனின் குழந்தைகள்; அழிவிலா ஆனந்தத்தில் சரியளவான பங்குக்குரியவர்கள். பவித்திர பரிபூர்ண வஸ்துக்களும் நீங்களே யாவீர்கள். இவ்வையகத்தில் வாழுங் கடவுளாகிய தாங்களோ பாபிகள்? ஒரு மனிதனைப் பாபியென்பதே பெருத்த தோஷம். அவ்வாறழைப்பது மானுட இயல்பிற்குத் தாழ்வும் பழியுமாகும். ஹே! சிம்மங்களே! உற்சாகத்துடனெழுங்கள்; கேவல ஆட்டு சுபாவத்தை விட்டொழியுங்கள்; நீங்கள் ஜனனமரணமற்ற நித்யான்மவஸ்துக்கள்; நீங்கள் ஜடப்பொருள்க ளல்லர்; அநித்யமான சரீரங்களுமல்லர்; ஜடத்திற் கடிமைப்பட்டவரல்லர்; ஜடந்தான் உங்களது அடிமை.

இப்படியாக எங்களது வேதங்கள் தயை சிறிதுமில்லா கொடூரமான விதிகளின் வெள்ள சொரூபமான விஷயங்களைக் கோஷிக்கவில்லை; அனந்த காரணகாரியங்களால் விளையும் நிர்ப்பந்த நிலைக்கு முடிவே கிடையாதென்றும் அவை சொல்லவில்லை; ஆனால், சகலவித பிரகிருதி நியமங்களுக்கெல்லாம் மூலமாக, ஒவ்வோ ரணுவினுக்கும் வல்லமைக்கும் அகமும் புறமும் எங்கும் ஓர் மகா புருஷன் நிலவுகின்றான்.

"அவனுடைய ஆணையாலேயே காற்று வீசுகின்றது; நெருப்பு எரிகிறது; வானம் வரையாது பெய்கின்றது; யமன் உலகில் சஞ்சரிக்கின்றான்"

𑌭𑌯𑌾𑌦𑌸𑍍𑌯𑌾𑌗𑍍𑌨𑌿𑌸𑍍𑌤𑌪𑌤𑌿 𑌭𑌯𑌾𑌤𑍍𑌤𑌪𑌤𑌿 𑌸𑍂𑌰𑍍𑌯𑌃 ।

𑌭𑌯𑌾𑌦𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌶𑍍𑌚 𑌵𑌾𑌯𑍁𑌶𑍍𑌚 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌰𑍍𑌧𑌾𑌵𑌤𑌿 𑌪𑌞𑍍𑌚𑌮𑌃 ॥

என்று முறை யிடுகின்றது. அந்த பரமபுருஷனுடைய ஸ்வரூபம் என்ன? "அவர் அங்கிங்கெனாதபடி எங்குமுள்ளவர்;

அருளொடு நிறைந்தவர்; அரூபி; எல்லாம் வல்லவர். எமது தந்தையும் நீரே; தாயும் நீரே; நீர் தாம் எனது அன்பிற்குரிய நண்பன்; எல்லாசக்திக்கும் காரண பூதரானவரும் நீர் தான். எங்களுக்கு பலத்தை நீர் கொடுத்தருளும். நீர் சர்வலோகசரண்யன்; இப்பிறவியின் சுமையைப் பொருக்கச் சிறிது உதவிபுரிந்தருளும்.''

பிதா த்வம் மாதா த்வம் தயித தநயஸ் த்வம் ப்ரியஸுஹ்ருத்
த்வமேவ த்வம் மித்ரம் குருரபி கதிஸ் த்வம் ஜகதாம் ।
த்வதீயஸ் த்வத்ப்ருத்யஸ் தவ பரிஜனஸ் த்வத்கதிரஹம் ப்ரபந்நஸ்
சைவம் ஸத்யஹமபி தவைவாஸ்மி ஹி பர: ॥

என்று வேத வித்துக்களான மஹரிஷிகள் கானஞ் செய்தார்கள். அவரை எவ்விதம் நாம் வழிபடுவது? பக்திவாயிலாகவே. "இம்மை மறுமைக்குரிய பொருள்களனைத்திலும் அரியபொருளாக அவரை நாம் எண்ணி வந்தித்து வழிபடவேண்டும்.''

வேதம் இவ்வித பக்திமார்க்கத்தையே புகட்டுகின்றது. இதனை ஹிந்துக்கள், கடவுளின் அவதாரமாகக் கொண்டாடும் ஸ்ரீ கிருஷ்ணபகவான் எவ்விதம் உபதேசிக்கிறாரென்பதைச் சற்று கனிப்போம்.

## ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் உபதேசம்.

அவர், 'இவ்வுலகில் மனிதன் தாமரை யிலையைப் போலிருக்க வேண்டும்; அது தண்ணீரில் வளர்ந்தபோதிலும் அதன்மேல் நீர் ஒட்டுகிறதில்லை. அவ்விதமே மனிதன் கடவுளிடத்து மனதை அர்ப்பணஞ்செய்து கர்மாவை உறுதியாகப் பற்றியவண்ணம் உலகில் வாழவேண்டும்'' என்று திருவாய் மலர்ந்துள்ளார்.

இம்மையின்பத்தைக் கருதியோ, மறுமைச்சுகத்தை விரும்பியோ ஈஸ்வரனிடம் பக்திசெலுத்துவதுநலம்; மேலும் எவ்வித பலனையும் வேண்டாமல் அவரிடத்து சேவை வாயிலாக அன்பு கொள்வது அதனிலும் சிறந்தது;

𑌨 𑌧𑌨𑌂 𑌨 𑌜𑌨𑌂 𑌨 𑌸𑍁𑌨𑍍𑌦𑌰𑍀𑌂 𑌕𑌵𑌿𑌤𑌾𑌂
𑌵𑌾 𑌜𑌗𑌦𑍀𑌶 𑌕𑌾𑌮𑌯𑍇 ।
𑌮𑌮 𑌜𑌨𑍍𑌮𑌨𑌿 𑌜𑌨𑍍𑌮𑌨𑍀𑌶𑍍𑌵𑌰𑍇 𑌭𑌵𑌤𑌾𑌦𑍍
𑌭𑌕𑍍𑌤𑌿𑌰𑌹𑍈𑌤𑍁𑌕𑍀 𑌤𑍍𑌵𑌯𑌿 ॥

"என்னையனே! எனக்குச் செல்வம் வேண்டாம்; தாரமும் தனையரும் வேண்டாம்; ஞானமும் வேண்டாம்; உமது திருவுள்ள மிதுவாயின் எத்தனை பிறவி வேண்டுமாயினும் எடுப்பேன்; ஆனால் பலாபேக்ஷயற்ற இடையறாத அன்பு உன்னிடத்தில் எனக்கேற்பட மட்டிலும் நீ அருள் புரிவாய்" என்பது ஒரு பிரார்த்தனை. ஸ்ரீ கிருஷ்ண பகவான் சிஷ்யர்களிலொருவரும் அக்காலத்திய பாரத கண்டச் சக்கரவர்த்தியுமான யுதிஷ்டிரர் தமது, அமசிருக்கையினின்றும் மாற்றார்களால் துரத்தப் பட்டபோது, தமது தர்ம பத்தினியுடன் இமயவரையி னடிவாரத்தி லுள்ள கானகமொன்றில் காக்துறைய நேரிட்டது. அப்பொழுது ஒரு நாள் அவர் மனைவி அவரைப் பார்த்து 'புண்ய புருடரிற் சிறந்த புருஷோத்தமரே! தாம் இவ்வளவு துன்பங்களை யனுபவிக்கக் காரணமென்ன?' என்று வினவினாள். அதற்கு யுதிஷ்டிரர்

𑌨𑌾𑌹𑌂 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌾𑌨𑍍𑌵𑍇𑌷𑍀 𑌰𑌾𑌜𑌪𑍁𑌤𑍍𑌰𑌿 𑌚𑌰𑌾𑌮𑍍𑌯𑍁𑌤 ।
𑌦𑌦𑌾𑌮𑌿 𑌦𑍇𑌯𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌵 𑌯𑌜𑍇 𑌯𑌷𑍍𑌟𑌵𑍍𑌯𑌮𑌿𑌤𑍍𑌯𑍁𑌤 ॥
𑌧𑌰𑍍𑌮 𑌏𑌵 𑌮𑌨𑌃 𑌕𑍃𑌷𑍍𑌣𑍇 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌾𑌚𑍍𑌚𑍈𑌵 𑌮𑍇 𑌧𑍃𑌤𑌮𑍍 ।
𑌧𑌰𑍍𑌮𑌵𑌾𑌣𑌿𑌜𑍍𑌯𑌕𑍋 𑌹𑍀𑌨𑌃 𑌜𑌘𑌨𑍍𑌯𑍋 𑌧𑌰𑍍𑌮𑌵𑌾𑌦𑌿𑌨𑌾𑌮𑍍 ॥

'பிரியே! இவ்விமயமலைத் தொடரைப் பார்! அது எவ்வளவு அழகாகவும் மகோந்நதமாயு மிருக்கிறது. அதனிடத்து எனக்கு அன்பு உதிக்கின்றது. அது எனக்கு ஒன்றையுங் கொடுப்பதில்லை யாயினும், மகிமையும் அழகுமுள்ள பொருள்களிடத்து அன்பு கொள்வது எனதியல்பாதலின் அதன் மீதும் நான் பிரேமையுள்ளவனாயிருக்கிறேன். பகவானே நமது அன்பிற்கு உரியபொருள். அவரே எல்லா மகிமைக்கும் அழகுக்கும் மூலமானவர். ஆனது பற்றியே நான் அவரிடம் அன்பு செலுத்துகிறேன். அவரிடமிருந்து யான் எதையும் இச்சிப்பதில்லை; விரும்பி வேண்டுவதுமில்லை. அவர் விருப்பப்படி என்னை எந்த இடத்திலேனும் வைக்கட்டும். நான் அன்பைக்கோரியே அவரிடம் அன்பு செலுத்த வேண்டியவன். அவ்வன்பை விலைப்பொருளாக்கும் தர்ம வாணிகன் நானல்ல' என்று பதிலுரைத்தார்.

## ஆத்மாவின் தெய்வத்தன்மை

ஆன்மா தெய்வத்தன்மை யுள்ளதென்றும், ஜடப் பொருளால் பந்தப்பட்டு மட்டும் இருக்கிறதென்றும், இப்பந்தம் நீங்குங்காலத்திலேயே பரிபூர்ண நிலை யெய்துமென்றும் வேதங்கள் ஓதுகின்றன. இப்பரிபூர்ண நிலைக்கே முத்தி எனப் பெயர். முத்தியாவது அபூர்ணம், மரணம், துக்கம், முதலியவற்றினின்றும் விடுபடல்.

இறைவனது திருவருளினால்மட்டுமே இவ்வித பந்த மொழிந்து விடுதலையுண்டாகும். அவருடைய திருவருள் புண்யாத்மாக்களுக்கே லபிக்கும். ஆதலால், அவருடைய கிருபைக்குப் புண்யமேகாரணமாகிறது. அக்கிருபை எவ்விதமுண்டாகின்றது? அவர்மாசற்ற மனமுடையாருக்கே காட்சியளிக்கின்றார். நிர்மல முனிபுங்கவர்கள் இப்பிறப்பிலேயும் ஈஸ்வரனைத் தரிசிக்கின்றனர். அப்பொழுதுதான்

𑌭𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 𑌹𑍃𑌦𑌯𑌗𑍍𑌰𑌨𑍍𑌥𑌿𑌶𑍍𑌛𑌿𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌸𑌂𑌶𑌯𑌾𑌃 ।
𑌕𑍍𑌷𑍀𑌯𑌨𑍍𑌤𑍇 𑌚𑌾𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌦𑍃𑌷𑍍𑌟𑍇 𑌪𑌰𑌾𑌵𑌰𑍇 ॥

'அவர்களுக்குச் சித்தசுத்தி ஏற்படுகின்றது; சந்தேகங்களெல்லாம் நீங்குகின்றன; இவ்வுலகின் பயங்கரமான காரண காரிய ரூபமாயுள்ள கர்மபலன்களினின்றும் அப்பொழுதுதான் அவர்களுக்கு நிவிர்த்தி யேற்படுகின்றது.' இதுவே ஹிந்துமதத்தின் உயிர்நிலையான கொள்கை. வீண்வார்த்தைகளாலும் சாஸ்திர தர்க்கங்களாலும்ஹிந்துவானவன் திருப்தியடைவதில்லை; இந்திரியங்களுக்கு எட்டாத உயர்ந்தநிலையொன் றிருக்குமானால், அதை நேருக்கு நேராகக் கண்டறிய வேண்டு மென்ற அவா அவனுக் கேற்படுகிறது. ஜடப் பொருளைவிட சிரேஷ்டமான ஆன்மா ஒன்று தன்னிடத்தே யுளவாயின், பரமகருணாநிதியும் எங்கும் நிறைந்த பரம்பொருளுமான கடவுளொருவருளரானால், அவரிடத்தில் நேரில் செல்ல விரும்புகின்றான் ஹிந்து. அவன் அப்பொருளைக் கண்டே தீரவேண்டியவன்; அவ்வித தரிசனத்தால்அவனுக் கேற்பட்டுள்ள ஐயப்பாடுகளனைத்தும் நீங்கியே தீரும். ஆதலால் ஆத்மானுபவ சித்தர்களான மகரிஷிகள், 𑌵𑍇𑌦𑌾𑌹𑌮𑍇𑌤𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌮𑌹𑌾𑌨𑍍𑌤𑌂 'நாங்கள் ஆன்மாவை நேரில் கண்டிருக்கிறோம்; கடவுளைக் கண்கூடாகத் தரிசித்திருக்கிறோம்' என்றியம்பியுள்ளார்கள். இதுவே பரிபூர்ண நிலையின் தன்மை. சில கொள்கைகளையும் சமயக்கோட்பாடுகளையும் நம்பி, அவைகளைச் சாதிக்கப் போராடுவதும் ஹிந்து தர்மமன்று; பிரத்தியக்ஷ அனுபவமே அதன் அதீத உண்மை; மூலமந்திரம். அது நம்பிக்கையால் மட்டும் கைவரத்தக்கதன்று. அனுபவத்தால் ஆய்ந்து கண்ட பேருண்மையேயாம்.

## ஹிந்துக்களின் மதம்.

இவ்விதம், பரிபூர்ண நிலையை யெய்துவதற்கும், தெய்வத்தன்மை யடைவதற்கும், ஈஸ்வரனைக் காண்பதற்கும் இடைவிடாமல் முயற்சிசெய்வதே ஹிந்துமதத்தின் முழு நிசுஷ்ணயமாயுள்ளது. இப்படிக் கடவுளை யடைவதும், அவரைத் தரிசிப்பதும் ஜகத் பிதாவான ஈஸ்வரனைப்போன்ற நிலையை யெய்த முயற்சிப்பதுமே ஹிந்துமத தர்மமாகும்.

பரிபூர்ண நிலையை யெய்திய பின்னர் மனிதன் எத்தகைய ஸ்திதியி லிருப்பான்? அவன் அளவிலா ஆனந்தத்தை யனுபவித்தவண்ண மிருப்பான்; எந்த ஒரே பரம்பொருள் மனிதனுக்குப் பரிபூர்ணநிலையை யளிக்குமோ, அந்த இறைவனை யடைந்து, அவரோடு பரமானந்தத்தை யனுபவிக்கிறான்.

இதுவரை சொல்லப்பெற்றவை யாவும் எல்லா ஹிந்துக்களாலும் ஏகமனதாய் ஒப்புக்கொள்ளப் பெற்றவையாகும். இந்தியாவிலுள்ள பல்வேறு சமயப் பிரிவுகளுக்கும் இதுவே பொது தர்மமாகும். ஆனால் பரிபூர்ணத்வம் துரியமானது; நிர்விகல்பமானது. அந் நிர்விகல்ப அவஸ்தை யென்பது ஒன்றே ஒன்றுதான்; அத் தனிநிலை இரண்டு மூன்றாக விருத்தலியலுமோ? முடியாது. அது குணாதீதமானது. அதற்கு வியக்தித்துவமில்லை. ஆதலின், ஒரு ஆன்மா அந் நிர்விகல்ப நிலையை யெய்தும் பொழுது, பிரம்மத்தோடு கலந்து ஐக்கிய மாகிவிடவேண்டும். அவ்வாத்மா துவைத ஞான பரிசூன்ய மடைந்து, தனது சத்ஸ்வரூபம், ஞான ஆனந்த சொரூபங்களை உணர்கின்றது. இங்ஙனம் ஆன்மா அடையநேரும் வியக்தி விகாசமானது (ஆத்மநாசம்) ஜடாவஸ்தையானதென்று சிலர் நூல்களில் வரைந்துள்ளதை நாம் பன்முறையும் படித்திருக்கிறோம். எப்பொழுதும்

காயப்பட்டறியாதவன் போர்க்களத்தடைந்த புண்ணின் வடுவினைக் கண்டு நகைத்த செயல்புதானே?

அந்நிலை மிக்கவுயர்ந்ததென்றும், ஜடாவஸ்தை யல்லவென்றும் நான் உறுதியா யுரைப்பேன். இச் சிறு தேகத்திற்குரிய ஆத்மஞானத்தை யடைந்து அனுபவிப்பது ஆனந்தமானால், இரண்டு மூன்று நான்கு சரீரங்களுக்குரிய ஆத்மஞானத்தை யனுபவிப்பது அதனைவிடப் பன்மடங்கு அதிகமானதா யிருக்கவேண்டு மன்றோ? இவ்விதம் உலக முழுவதுமே நம்முடைய ஆன்மபோகத்திற் குரித்தாவது தான் ஆனந்தத்தின் முடிவாகும்.

## அகண்ட சொரூபம்.

ஆக, இந்த அந்நியமற்ற விஸ்வதேகத்தை யடைய வேண்டுமாயின், இவ் விழிவான சிறைபோன்ற சாதாரண சரீரம் தொலைய வேண்டும். 'நான் பிராணமயனாகும் பொழுதே மரணம் என்னைவிட்டு நீங்கும்; நான் ஆனந்த மயனாகும் பொழுதுதான் துக்கம் என்னை விடும்; நான் ஞானமயனானாற்றான் அஞ்ஞானமும் குற்றங் குறைகளும் என்னைவிட் டகலும்'.—இது விக்ஞான சாஸ்திர சம்மதமான முடிவு. தனித்தனி சரீரவடிவாய்த் தோன்றும் ஜடப் பொருள்களின் உருவவேறுபாடுகள் நிலையற்றனவென்றும், உண்மையாக என்னுடைய இத்தேகம் பெரிய ஜடசமுத்திரத்தில் இடைவிடாமல் மாறுத லடைந்துகொண்டே யிருக்கும் திரையையொத்த ஓர் சிறு உருவென்றும் நிகழ்கால பிரகிருதி-விக்ஞான சாஸ்திரம் மெய்ப்பிக்கின்றது.

விக்ஞான சாஸ்திரமாவது ஒரு மூலமான பொருள் அல்லது சக்தியைக் கண்டுபிடித்தலேயன்றி வேறல்ல. ஆகவே, விக்ஞான சாஸ்திரம் அம் மூலப்பொருளைக் கண்டு

பிடித்த பின்னர், அது மேலே செல்லாமல் நின்றுவிடும். ஏனெனில், அப்பொழுதே அதன் உட்கருத்து பூர்த்தியாகி விடுகின்றது. ஒரு பூத பதார்த்தத்திலிருந்து மற்றெல்லாப் பொருள்களும் உண்டாக்கப்படலாமென்ற ரசாயன சாஸ்திரத்தைக் கண்டுபிடித்துவிட்ட பிறகு அதன் அபிவிருத்தி நின்றுவிடும். ஒரு சக்தியிலிருந்துதான் சகலவித சக்திகளும் உண்டாகின்றனவென்று கண்டுபிடிக்குந் தொழிலை ஜட சக்தி சாஸ்திரம் செய்து முடித்துவிடின் அதன் வேலை பூர்த்தியாகிவிடும்; அதுபோன்றே மத சாஸ்திரமும், மரண சுபாவமுள்ள உலகத்தில் அழிவற்ற ஒருவருள்ளாரென்றும், எக்காலத்திலும் மாறுத லடைந்துகொண்டே யிருக்கும் உலகில் மாருத மூலபுருஷர் ஒருவருண்டென்றும், அவரே பரமாத்மாவென்றும், பிற ஆன்மாக்கள் யாவும் அவர் பிரதிபிம்பத்தை யடைந்தனவே யென்றும், எப்பொழுது கண்டு கொள்ளுமோ அப்போது அது பூர்ணமாகும். இவ்விதம் வெகு ஈஸ்வர வாதத்தாலும், துவைதவாதத்தாலும் ஒன்றெனை ஓதும் அத்வைதம் உண்டாகின்றது. அதற்கு மேற் போக எந்த சமயத்திற்கும் சாத்யமில்லை. இதுதான் எல்லா விக்ஞான சாஸ்திரங்களும் அடைய உத்தேசிக்கும் எல்லை.

## எல்லாம் ஏகவஸ்துவின் தோற்றமே.

விக்ஞான சாஸ்திரங்கள் யாவும், முடிவில் இந்த சித்தாந்தத்துக்கே வந்தாகவேண்டும். நம்முன் காணப்படும் பொருள்க ளனைத்தும், தோற்றத்தில் உருவ வேறுபாட்டை யுடையனவே யன்றி சிருஷ்டியிலில்லை யென்று நிகழ்கால ஐரோப்பியர்கள்—வைக்ஞானிகள் கூறுகின்றனர். ஹிந்துவானவன், எந்த மனோபாவத்தைத் தனது உளநிலையென வெகுகாலமாகக் காத்து வந்தானோ அது, அவ்வைக்ஞானிகளால் பிரபல பிரமாணங்களோடு புதிது புதிதாகக் கண்டு

பிடிக்கப்பட்டு வெளிவர விருத்தல்பற்றிப் பெருமகிழ்ச்சி யடைகின்றான்.

இனி, வேதாந்த அறிவின் உச்சத சிகரத்தி லிருந்திறங்கிச் சாதாரண மக்களின் சமயத்தைப்பற்றி ஆலோசனை செய்வோம். பாதகண்டத்தில் வெகு ஈஸ்வரவாதம் இல்லை யென்று முன்னாக நான் உங்களுக்குச் சொல்லிவிடுகிறேன். ஒவ்வொரு தேவாலயத்திலும்,ஒருவர் போய் நின்று உற்றுக் கேட்டால், பக்தர்கள் ஸர்வ வியாபகத்வம் உள்பட கடவுளுக்குரிய சகல குணங்களையும் ஆங்குள்ள சிலாரூபங்களுக்கே ஆரோபிப்பதைக் காணவாம். இது வெகு ஈஸ்வரவாதமல்ல; தத்தம் ஆப்த தெய்வத்திற்குப் பிராதான்யம் கொடுக்கும் வாதமுமன்று. 'எப்பெயர்கொண் டழைப்பினும், ரோஜாப்புஷ்பம் தன் மணத்திற் சிறிதும் குன்றுவதில்லை.' வெறும் பெயர் சூட்டுதல் விளக்கமாகாது.

நான் பால்யனா யிருந்தபோது இந்தியாவில் ஒரு கிறிஸ்தவப்பாதிரி ஒரு ஜனக்கூட்டத்தில் பிரசங்கித்த விஷயம் இப்பொழுது என் ஞாபகத்திற்கு வருகின்றது. அவர் அழகிய விஷயங்களை அருமையாகப் பேசிக்கொண்டு வருகையில் ஜனங்களைப் பார்த்து 'என்னுடைய கைப்பிரம்பால் உங்களுடைய விக்ரஹத்தை அடித்தால் அது என்னை என்ன செய்யும்?' என்று கேட்டார். அப் பிரசங்கத்தைக் கேட்டுக் கொண் டிருந்தவர்களில் ஒருவர் உடனே துடுக்காக "நான் உமது தேவனை வைதால் அவர் என்ன செய்வார்?" என்று அப்பாதிரியாரை வினவினர். அதற்குப் பிரசங்கியார் 'மரணத்திற்குப் பிறகு நீ தண்டிக்கப்படுவாய்' என்றார். 'அது போலவே எங்கள் விக்ரஹமும் நீர் இறந்தபின் உம்மைத் தண்டிக்கும்' என்றார் அந்த ஹிந்துவும்.

மரத்தின் குணகுணங்களை அதன் பழத்தால் அறியலாம். நல்லொழுக்கத்திலும், ஆத்யாத்மிக பாவத்திலும்,

பக்தியிலும் சிறந்த பெரியோர்களை விக்ராராதனை செய்பவர்களாகவே யான் கண்டிருக்கிறேன்; ஏனைய சமூகத்தாரில் யான் கண்டதில்லை. ஆதலால், 'பாவத்திலிருந்து புண்யம் பிறக்குமா?' வென்ற கேள்வி இயல்பாக அடிக்கடி என்மனத்தி லெழுவதுண்டு.

## மூடப் பிடிவாத மேன்?

மூடபக்தி மனிதனுடைய பரமசத்துரு; யுக்திக்கேற்காத மதவைராக்கியமோ அதனிலும் கொடியது; கிறிஸ்தவன் ஏன் தேவாலயத்திற்குப் போகிறான்? சிலுவையை ஏன் பரிசுத்தமானதென்று பாவிக்கிறான்? பிரார்த்தனை செய்யும்போது ஏன் வானத்தை நோக்குகிறான்? கத்தோலியர் என்னும் பிரிவினரின் தேவாலயத்தி லேன் அத்தனை மூர்த்திகள் உள்ளன? பரிசுத்தர்கள் என்னும் சம்பிரதாயிகள் தோத்திரஞ் செய்யுங்கால் அவர்களது ஹிருதயத்தில் ஏன் அத்தனை மூர்த்திபாவம் இருக்கவேண்டும்? சகோதரர்களே! சுவாசிப்பது எப்படி நாம் உயிருடனிருக்க அவசியமோ அப்படியே சமாதியிலிருக்குங் காலத்தில் மூர்த்தி சொரூபம் மனத்தி லுதிக்கவேண்டிய தவசியம். பாவகா ஸம்யோக நியமப்படி, ஜடரூபத்தால் மானஸபாவனையும், மானஸ பாவனையால் ஜடரூபமும் தோன்றுகின்றன. இதனாலேயே ஹிந்துக்கள் தேவோபாசனையில் வெளிப்படையான சங்கேத மூர்த்தியை ஆராதிக்கின்றனர். தாம் தியானிக்கும் கடவுளிடம் மனதை நிறுத்த இவ்விக்ரஹ ஆராதனை துணைபுரியுமென்று ஹிந்துக்கள் சொல்லுவார்கள். இந்த விக்ரஹமே கடவுளல்ல; அதற்கு சர்வ வியாபகத்துவம் இல்லை யென்பதை உங்களைப்போலவே அவர்களும் நன்றாயறிவார்கள். ஆனால், உலகில் சர்வவியாபகத்துவம் என்பதைப்பற்றி எத்தனைபேருக்கு எவ்வளவு தெரியும்? அது

வெறும் பெயரளவிலேயே தெரிந்திருக்கும். கடவுளுக்கு வெளி விஸ்தீர்ண மென்பதுண்டா? இல்லையானால், ஸர்வ வியாபகத்துவம் என்ற வார்த்தையை நாம் சொல்லுங்கால், பரந்த ஆகாசத்தின் அல்லது பூமியின் நினைவைத்தவிர வேறொன்றும் நமக்குண்டாவதில்லை.

நமது உடலும் உயிரும் அமைந்துள்ள முறைப்படி, எவ்விதமோ, அகண்டாகார பாவத்தை நாம் அடையும் போது நீலநிறமுள்ள ஆகாயத்தின் வடிவோ, பரந்துள்ள சமுத்திரத்தின் ரூபமோதான் நமது நினைவுக்கு வருகிறது. அதைப்போன்று, பரிசுத்தம் என்னும் எண்ணம் நமக்குதிக் கும்பொழுது தேவாலயமோ, மசூதியோ, சிலுவையோ தான் நமது மனத்தில் உருவகமாகின்றது. அவ்வாறே ஹிந்துக்கள் பவித்திரம், விமலம், சத்யம் சர்வ வியாபகத்துவம் முதலிய பாவங்களை வெவ்வேறு விக்ரஹங்களோடும் ரூபங்களோடும் பாவனைப் படுத்திக் கொள்ளுகிறார்கள். ஆனால் அவர்களுக்கும் மற்றவர்களுக்கும் ஒரு வித்தியாசம் மட்டு மிருக்கிறது. அதாவது சிலர் தம்மாயுட்கால முழு வதையும் ஆலயத்தின்கண் ணுள்ள விக்ரஹ ஆராதனையி லேயே செலவிட்டு, விருத்தி யடையாம லிருக்கிறார்கள். ஏனெனில் அவர்களுக்கு சமயமென்பது சில கொள்கைகளை முற்றிலும் நம்புவதும் பிறருக் குதவி புரிவதுமேதான். ஆனால் ஹிந்துமதத்தின் முக்கியலட்சியம் பிரம்ம சாக்ஷாத் காரத்தைக் கண்டறிவதுதான். மனிதன் பிரம்மானந்தத்தை நேருக்கு நேராக அனுபவித்தாற்றான் தானே தன்மயனாய் விளங்கு மியல்பினனாகின்றான். ஆகவே, விக்ரஹங்கள், ஆல யங்கள், வேத சாஸ்திரங்கள் முதலியன யாவும் அவ னுடைய சமயஜீவனின் பால்யாவஸ்தைக்கு ஞான ஆரம்ப நிலையில் உதவமட்டுமேயாம். அதிலிருந்து அவன் படிப்படி யாய் உயரவேண்டியவன்.

## பரிவ்ராஜகன் (எவ்விடத்தும் தங்காதவன்)

"அவன் ஓரிடத்திலும் தங்கியிருத்தல் கூடாது; பகிரங்க பூஜை, விக்ரஹ ஆராதனை ஆகிய இவை உத்தம ஸ்தானத்தை யடைய முயலும் தாழ்ந்தபடிகள்; அதற்குமேல் சிறிது உயர்வுடையது மானசிக பூஜை; ஆனால் 'ஈஸ்வர சாக்ஷாத்காரமே பரமோத்க்ருஷ்டமானது"

𑌉𑌤𑍍𑌤𑌮𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌸𑌦𑍍𑌭𑌾𑌵𑍋 𑌧𑍍𑌯𑌾𑌨𑌭𑌾𑌵𑌸𑍍𑌤𑍁 𑌮𑌧𑍍𑌯𑌮𑌃 ।
𑌸𑍍𑌤𑍁𑌤𑌿𑌜𑌪𑍋𑌽𑌧𑌮𑍋 𑌭𑌾𑌵𑍋 𑌬𑌹𑌿𑌃 𑌪𑍂𑌜𑌾𑌧𑌮𑌾𑌧𑌮𑌾 ॥

என்று வேதம் முறையிடுகின்றது.

இதில் இன்னொரு விசேஷம். விக்ரஹத்தின் முன்னால் சாஷ்டாங்கமாக வணங்கும் பக்தன், 'சூர்யன் அவரைப் பிரகாசிக்கச் செய்யமாட்டான்; சந்திரனாகட்டும், நட்சத்திரங்களே யாகட்டும், மின்னலாகட்டும், அவரைப் பிரகாசிக்கச் செய்யமாட்டா. நாம் அக்கினியென்று எதைப் பூசிக்கின்றோமோ அதுவும் அவரைப் பிரகாசிக்கச் செய்யாது. அவரே அவை யனைத்திற்கும் பிரகாச மளிப்பார்"

𑌨 𑌤𑌤𑍍𑌰 𑌸𑍂𑌰𑍍𑌯𑍋 𑌭𑌾𑌤𑌿 𑌨 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌤𑌾𑌰𑌕𑌂 𑌨𑍇𑌮𑌾 𑌵𑌿𑌦𑍍𑌯𑍁𑌤𑍋
𑌭𑌾𑌨𑍍𑌤𑌿 𑌕𑍁𑌤𑍋𑌽𑌯𑌮𑌗𑍍𑌨𑌿𑌃
𑌤𑌮𑍇𑌵 𑌭𑌾𑌨𑍍𑌤𑌮𑌨𑍁𑌭𑌾𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌤𑌸𑍍𑌯 𑌭𑌾𑌸𑌾
𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌵𑌿𑌭𑌾𑌤𑌿 ॥

என்று துதிப்பதை நாம் கண்ணுறுங்கால், அவன் அவ் விக்ரஹத்தைப் பழிக்கின்றானென்றாவது, அவ்விக்ரஹ ஆராதனையைப் பாபகர்மமென்று பகருகின்றானென்றாவது நினைக்கலாமோ? இதில் ஜீவனுக்கு இன்றியமையாத அவஸ்தையொன்றுளதென்றே அவன் அறிகிறான். இன்று குழந்தையா யிருப்பவன், அப்பால் வளர்ந்து மனிதனாகிறான்.

ஆதலால், கிழவனொருவன் இளமை, பாலியப் பருவங்களைப் பாபகரமானதென்று சொல்வதும் இகழ்வதும் தகாதல்லவா ?

விக்ரஹ ஆராதனை அவசியமென்று ஹிந்துமதங் கூறவில்லை; அதன்வாயிலாக ஒருமனிதன் தனது தெய்வீக நிலையை அடையக் கூடுமானால் அதைப் பாபகரமானதென்று சொல்வது பொருந்ாததல்லவா? அந்த ஆரம்ப அவஸ்தையைக் கடந்த பின்பும் அவனதனைத் தாழ்ந்ததாகக் கருதலாகாது. ஹிந்துவின் சித்தாந்தப்படி, மனிதன் மயக்கத்திலிருந்து உண்மையான நிலையை யெய்துவதில்லை. உண்மையிலிருந்தே உண்மைக்கு, அதாவது கீழ்ப்பட்ட ஸ்திதியில் கைக்கொள்ளப்படும் உண்மையிலிருந்து உயர்ந்த—மேம்பட்ட ஸ்திதியில் விளங்கும் உண்மைக்குச் செல்லுகிறான். யாவற்றினுந் தாழ்ந்த ஜடப்பொருட் பூசனைமுதல், உயர்ந்த வேதாந்தத்தின் ஆணித்தரமான அகண்ட அத்வைதவாதம் வரையிலுமுள்ள தர்மங்களெல்லாம், ஆதியும் அந்தியமுமற்ற நித்திய வஸ்துவை அடைந்து அனுபவிக்க ஒவ்வொரு மனுஷிய ஆத்மாவுஞ் செய்கின்ற பிரயத்னங்களின் சொரூபங்களேயாம். பிறவியினாலும், பழக்கத்தினாலும் ஒவ்வொரு தர்மத்தின் பயனும் நிர்ணயிக்கப்படும். அவை ஒவ்வொன்றும் ஆத்மார்த்த அபிவிருத்தியின் ஒவ்வொரு படியைச் சூசிப்பிக்கின்றன. ஒவ்வொரு ஜீவாத்மாவையும், ஜோதி சொரூபமாயிலங்கும் சூர்யனை நோக்கி ஆகாய மார்க்கத்தில் மென்மேலும் பறந்து படிப்படியாக அதிக வலிமைபெற்று நிற்கும் இளங்கருடனுக்குச் சமானமாகச் சொல்லலாம்.

## சமயக்கோள்கைகளும் அடையாளங்களும்.

வேற்றுமையில் ஒற்றுமை விளங்குவதுதான் உலகவியற்கையின் ரீதி. இவ்விஷயத்தை ஹிந்துக்கள் செவ்வை

யாக உணர்ந் திருக்கின்றார்கள். ஏனைய சமயங்கள் ஒவ்வொன்றும் சிற்சில விதிகளை ஏற்படுத்தி அவற்றை யாவரும் கைப்பற்ற வேண்டுமென்று வற்புறுத்துகின்றன. அவை ஜன ஸமூகத்தின் முன்பாக ஒரேவிதமான சட்டையைக் காட்டி, ராமன், கிருஷ்ணன், கோவிந்தன் ஆகிய எல்லாருக்கும் அது பொருந்தவேண்டுமென்று சொல்லுகின்றன. அச் சட்டை கிருஷ்ணனுக்காவது கோவிந்தனுக்காவது சரியாயில்லாவிட்டால் அவர்கள் அங்கியின்றி யிருக்கவேண்டியவர்கள்தான். அகண்ட வஸ்துவைப் பிரத்தியக்ஷமாய் அனுபவிப்பதற்காவது, சிந்தனை செய்வதற்காவது, சொல்வதற்காவது, நமது மனதிற்குப் பொருளாகக்கூடிய கண்டப் பொருளின் உதவியில்லாமல் இயலாதென்பதை ஹிந்துக்கள் கண்டுகொண் டிருக்கின்றனர். ஹிந்துக்களின் விக்ரஹங்களும், கிறிஸ்தவர்களின் சிலுவையும், முகம்மதியர்களின் சந்திரகலை—இளம்பிறையும் ஆத்யாத்மிக பாவனைகளின் சங்கேத சொரூபங்களாம். ஒவ்வொரு மனிதனுக்கும் இவ்வித உதவி வேண்டுமென்பது அவசிய மன்று; ஆனால் அதை விரும்பாதவர்கள் அதைத் தப்பென்றுசொல்ல நியாயமே கிடையாது. ஹிந்துமதத்தில் அது வேண்டுமென்பது கட்டாயமில்லை.

நான் இன்னும் உங்களுக் கறிவித்தற் குரிய விஷயமொன்றுண்டு. இந்தியாவில் நடைபெறும் விக்ரஹ ஆராதனை எவ்வித கோரமான செயலையு முடையதன்று. அது வேசிகளைப் பெருக்கும் தன்மையது மன்று. ஆனால் அது, மன பரிபக்குவ மடையாதவர்கள் மதத்தின் உயர்ந்த உண்மைகளைக் கிரஹிப்பதற்கு வழிபாடியற்றும் முயற்சியேயாம். ஹிந்துக்களிடத்தில் தவறுக ளுளவாயினும், அவர்கள் எப்போதும் தங்கள் ஆன்ம தேகத்தைத் தண்டித்துக்கொள்வார்களே யல்லாமல், அயலாரின் கழுத்தை யறுக்க மறக்

தும் மனந்துணியார். மதாவேசமுடைய ஹிந்துவானவன் அக்நிப்பிரவேசஞ் செய்து தனது தேகத்தை ஆஹுதி யாக்குவானேனும், புறச் சமயங்களை யழிக்கும்பொருட்டு அவன் தீ மூட்ட இசையான். இத் தோஷமும் ஹிந்துமதத்திற்குக் கிடையாது. பண்டைக் காலத்தில் கிறிஸ்தவ சமயத்தார் சூன்யக்காரர்களைச் சுட்டெரித்தது எவ்வாறு தவறாகாதோ அவ்வாறே இப்படி தீக்குளிக்கும் செயலும் ஹிந்து தர்மப் படி குற்றமாகாது.

ஆகவே, உலகிலுள்ள சகல சமயங்களும், பல்வேறான ருசியுள்ள ஆடவர் பெண்டிரெனு மிருபாலரும் தத்தம் பரிபாக பேதத்துக்கும் கர்ம விசேஷத்திற்குந் தக்கவாறு யாத்திரையாகி, ஒரே முடிவைக்கருதி மென்மேலும் முன்னடையச்செய்யும் உபாயங்களென்பதே ஹிந்துக்களின்கொள்கை. ஜடபாவனையுடைய மனிதனினின்றும் பிரம்மம் பரிணமிக்குமாறு செய்வதே ஒவ்வொரு சமயத்தின் காரியமாகும். ஒரே கடவுள்தான் எல்லாமதங்களையும் விளங்க வைத்திருக்கின்றார். அப்படியானால் சமயங்களுக்குள் ஏனப்படி வித்தியாசங்களேற்படவேண்டும்? ஹிந்துக்கள் 'அவ்வேற்றுமைகள் பார்வைக்குமட்டும் வித்யாச முடையனவாகத் தோன்றும்' என்றியம்புகின்றனர். ஒரே உண்மை வெவ்வேறு சுபாவமுள்ள மனிதர்களின் வெவ்வேறு பக்குவ நிலைக்கேற்றபடி அமைந்து விளங்குவதால் அவ் வேற்றுமைகள் தோற்றுகின்றன.

### ஒரே கடவுள் எல்லா சமயங்களிலும் விளங்குகிறார்.

பலவித நிறமுள்ள கண்ணாடிகளின் வழியாக ஒரே வெளிச்சம் ஊடுருவி வருவதை இது ஒத்திருக்கிறது. பலவகைப் பிரத்தியேக சுபாவத்தின் உபயோகத்திற்காக இவ்வித அற்ப வித்தியாசங்கள் அவசியமா யிருக்கின்றன.

ஆனால் இவை ஒவ்வொன்றி னுளத்திலும் நிலைத்திருப்பது ஒரே உண்மைதான். சர்வேஸ்வரன் ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மாவாகத் திருவவதரித்தபொழுது,

𑌮𑌯𑌿 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌪𑍍𑌰𑍋𑌤𑌂 𑌸𑍂𑌤𑍍𑌰𑍇 𑌮𑌣𑌿𑌗𑌣𑌾 𑌇𑌵 ।
𑌯𑌦𑍍𑌯𑌦𑍍𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌮𑌤𑍍𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍂𑌰𑍍𑌜𑌿𑌤𑌮𑍇𑌵 𑌵𑌾 ।
𑌤𑌤𑍍𑌤𑌦𑍇𑌵𑌾𑌵𑌗𑌚𑍍𑌛𑌤𑍍𑌵𑌂 𑌮𑌮 𑌤𑍇𑌜𑍋𑌂𑌶𑌸𑌂𑌭𑌵𑌮𑍍 ॥

'முத்துமாலையில் ஓடும் நூலைப்போல நான் ஒவ்வொரு சமயத்தினுள்ளு மிருக்கிறேன். எங்கெங்கு விசேஷப் பிரபாவமாக சக்தியும் தூய்மையுந் தோன்றி, ஜனசமூகத்தை நல்வழிப்படுத்துகின்றதோ அங்கங்கே நான் நிலைத்திருப்பதாக அறிவீர்களாக' என்று ஹிந்துக்களுக்கு உபதேசித்திருக்கிறார். இதன் பயன்தானென்ன? வடமொழி தரிசன நூல்களனைத்தையும் தேடிப் பார்த்தாலும் 'ஹிந்துக்களுக்கு மட்டுமே மோக்ஷமுண்டு, மற்றவர்களுக்குக் கிடையாது' என்ற வசனம் எங்கும் காணப்படவில்லை யென்று யான் உங்களுக்கு நிச்சயமாய்ச் சொல்லுவேன்; அதை மறுக்க யாராவது முன்வர முடியுமா? ஸ்ரீ வியாஸபகவான் தாம் வரைந்த வேதாந்த சூத்திரத்தில் 𑌅𑌨𑍍𑌤𑌰𑌾 𑌚𑌾𑌪𑌿 𑌤𑍁 𑌤𑌦𑍍𑌦𑍃𑌷𑍍𑌟𑍇𑌃 அதாவது 'நம்முடைய ஜாதி சமயங்களுக்கு வெளியேயுள்ளவர்களிலும் சித்த புருஷர்கள் காணப்படுகின்றார்கள்' என்று கூறியிருக்கின்றனர் அப்படியானால் ஆஸ்திக சிகாமணிகளாகிய ஹிந்துமக்கள், அக்ஞேயவாதமான பௌத்த மதத்தையும் நிரீசுவரவாதமாகிய ஜைன மதத்தையும் எவ்வாறு விசுவாசிக்கிறார்கள்? என்று நீங்கள் கேட்கலாம். * பௌத்தர்களும், ஜைனர்களும் கடவுளையே நம்பி யிருப்ப

* 'பிரத்யக்ஷத்திற் கப்பாலுள்ளதை அறியாதவர்கள்' இவ்வுண்மை நாலடியார் என்னும் நூலின் கண் பல விடங்களிலும் விளக்கமாதல் காண்க.

தில்லை ஆயினும், மனிதனிடத்தி லிருந்து தெய்வத்தன்மை பரிணமிக்குமாறு செய்யுந் தன்மையுள்ள ஒவ்வொரு சமயத்திலும் பொருந்தியிருக்கின்ற உண்மையே அவர்களுடைய மதலக்ஷியம். அவர்கள் ஜகத் பிதாவாகிய சர்வேஸ்வரனைக் காணவில்லை யானாலும், அவ் வீஸ்வரனது புத்திர சொரூபர்களைக் கண்டிருக்கிறார்கள். * 'புத்திரனைப் பார்த்தவர்கள் பிதாவையுங் கண்டவர்களாவர்.'

சகோதரர்களே! இதுவே ஹிந்துமதத்தைப் பற்றிய கொள்கைகளின் சாராம்சம். ஹிந்துக்கள் தங்களுடைய உத்தேசங்களனைத்தையும் நிறைவேற்றுவதில் தவறியிருக்கலாம். ஆனால் சர்வசம்மதமான மதமொன்று எந்தக்காலத்திலேனும் உண்டாகக் கூடுமாயின், அது கால தேசங்களைப் பொருத்ததா யிராமல் இருக்கவேண்டும். அந்த மதம், அது உபதேசிக்கும் கடவுளைப்போல அனந்தமாயு மிருத்தல் வேண்டும். அந்தச் சமய சூரியன், சாதுக்கள் மீதும், பாபிகள் மேலும், கிருஷ்ணபக்தன் மேலும், கிறிஸ்தவர்மீதும் சமமாகவே பிரகாசிக்க வேண்டும். அம்மதம், கேவலம் கிறிஸ்தவ மதமாகவோ, பிராம்மண மதமாகவோ, முகம்மதியர் மதமாகவோ இல்லாமல், இவை யாவும் ஒன்றுகிய ஸமஷ்டி சொரூபமாய் இன்னும் பெருகவேண்டிய இடந்தருவதாயுமிருக்கவேண்டும்; வன விலங்குகளுக்கும் அதமராய்த் திரிந்துழலும் தாழ்ந்தோர்முதல், விவேகத்தாலும், அன்பாலும் எல்லாமக்களிலும் உயர்ந்து விளங்கி தம்மைக் காணும் மனி

---

* 'I and my father are one.'—நானும் எனது பிதாவும் ஏகமானவர்களே; He that hath seen the son hath seen the Father' புத்திரனுகிய என்னைக் கண்டோர் கடவுளான என் பிதாவைக் கண்டவர்களே யாவர். கிறிஸ்தவர்கள் கூட்டத்தில் சுவாமிகள் பேசினமையால் இவ்வாக்கியங்களைக் குறிப்பிட நேர்ந்த தென்க.

தர்கள் 'இவர்கள் அமரரோ, அன்றி மனிதரோ' என்று சங்கிக்கும்படியான நிலையை யெய்தியுள்ள உத்தம ஸ்திரீ புருஷர்கள்வரையிலுள்ள சகலரையும் ஆதரித்து, அளவற்ற தனது கரங்களால் அனைவரையும் அணைத்தெடுக்கும் சார்வபௌமிக சுபாவத்தை அந்தசமயம் அடைந்திருக்கவேண்டும்.

## சர்வ சம்மதமான சமயம்.

அது அன்னியர்களைத் துன்புறுத்தவோ, அவர்களிடம் பொருமை கொள்ளவோ முற்படாத சமயமாகவும், ஒவ்வொரு ஆடவர் பெண்டிரிடத்துமுள்ள தெய்வீகத்தன்மையை ஆய்ந்தறிவதாகவும், மக்களனைவரும் தமது உண்மைத் தன்மையான தெய்வீகத்தை யடைவதில் உதவி புரிவதாயும், அதன் முழுவல்லமையையும் நோக்கத்தையும் வெளிப்படுத்துவதாயுமிருக்க வேண்டும்.

அப்படிப்பட்ட சமயத்தை அருளுவீர்களானால் எல்லா ஜாதியாரும் தங்களைப் பின் பற்றுவார்கள். முன் அசோக சக்ரவர்த்தி கூட்டிய சபையானது கேவலம் பௌத்த சபையாகவே யிருந்தது. அக்பர் சக்ரவர்த்தி கூட்டிய தர்மசபை கூடியவரையில் முன்கூறியபடி பல சமயத்தவருங் கூடியதாயிருந்தபோதிலும், அதனால் விசேஷபலனென்றும் விளையவில்லை. 'ஒவ்வொரு மதத்திலும் சர்வேஸ்வரன் விளங்குகிறார்' என்ற பேருண்மையை அகில முழுவதிலும் பிரகடனஞ் செய்யும் பாக்கியம் அமெரிக்காவுக்கே உரியது போலும்!

## அன்புள்ள வாழ்த்து.

ஹிந்துக்கள் பிரம்மமென்றும், பாரசீகர்கள் அஹீரமஸ்தரென்றும், பௌத்தர்கள் புத்தரென்றும், யூதர்கள் ஜிஹோதாவென்றும், கிறிஸ்தவர்கள் வானுலகிலுள்ள பிதாவென்றும், எந்த தெய்வத்தைப் போற்றுகிறார்களோ, அந்த சர்

வேஸ்வரன் உங்கள் மேலான உத்தேசத்தை நிறைவேற்றப் போதிய சக்தியை யருள்வாராக. சமரஸபாவனையென்னும் கிழ்த்திசையில் உதயமான நட்சத்திரம், சிலசமயம் மங்கலாயும், சிலவேளை பிரகாசமாயும் ஒளிவீசி, குடதிசையை நோக்கிக் கொஞ்சங் கொஞ்சமாகச் சென்று, பூப்பிரதக்ஷணஞ் செய்து முடித்து, மறுபடியும், குணதிசையின் அடிவாரத்தில் முன்னிலும் பன்மடங்கு மேலான பிரகாசத்துடன் உதயமாகி யுள்ளது.

சுதந்திரத்திற்குத் தாயகமான * கொலம்பியாவே! நீ என்றும் வாழி! நீ என்றும் அயலாரைக் கொன்று அவர்களுடைய ரத்தத்தைச் சிந்தவைக்க சிந்தித்ததேயில்லை. அயலாரை கொள்ளையடித்து ஐஸ்வரியத்தைச் சேர்க்கவேண்டுமென்னும் அற்பகுணம் உன்னிடத்தென்று மிருந்ததில்லை. ஆதலாற்றான் நாகரீகர் முன் சமரஸக் கொடியை யுயர்த்தும் பாக்கியம் உனக்கே கிடைத்தது.

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:

அன்றைய உபந்நியாசம் இத்துடன் முடிவடைந்தது. ஹிந்துமதத்தைப்பற்றிய உண்மைகளை பலமுறை கற்றறிந்தும் மயக்கமுடையவர்களா யிருந்த அமரிக்கர்களுக்கு சுவாமிகள் 'ஹிந்துமதப் பிரசங்க' வாயிலாக ஹிந்துமதத்தின் பிரபாவத்தை வெகு சுலபமா யூட்டினார். பாமரன் முதல் பண்டிதர்வரை யாவரும் அவர் கூறியவற்றை கிரகித்தார்கள். அன்று சபை அதோடு முடிவடைந்தது.

---

* கொலம்பஸ் என்பவரால் முதல் முதலாகக் கண்டு பிடிக்கப் பட்டபடியால் அமரிக்காவிற்கு 'கொலம்பியா' என்ற மற்றொரு பெயரும் வழங்கப்படும்.

## பின்னியற்றிய பிரசங்கங்கள்

ஊற்றுநீர் போல் அன்பு பெருக, அனைவரும் ஆனந்தக் கண்ணீர் சொரிய, சுவாமிகள் 'சர்வதர்ம மகாசபை' கூடிய பத்தாம் நாள்—1893௵ செப்டெம்பர்௴ 20௳ நிகழ்த்திய சொற்பொழிவு பின் வருமாறு:

புறச்சமயத்தவர் கிறிஸ்து சமயத்தை நியாயபூர்வமாகச் சீர்தூக்கி ஆராய்ச்சிசெய்ய முன் வரும்போது, கிறிஸ்தவ சமயத்தவர் அதற்கு இடங்தரச் சித்தமாயிருக்கவேண்டும். ஆதலால், உங்கள் சமய விஷயங்களில் நான் ஏதேனுஞ் சிறிது குற்றங் குறைகளை எடுத்துக் கூறின் நீங்கள் மனவருத்தமடையீரென்று நம்புகிறேன். ஹே! கிறிஸ்தவ சகோதரர்களே! நீங்கள் 'அக்ஞானிகள்' என்றழைக்கும் எங்கள் சமயத்தவரைக் காக்கும்பொருட்டு, பாதிரிமார்களை மத உணர்ச்சியுடன் அனுப்புகின்றீர்களல்லவா? பசிப்பிணியால் துன்பப்படும் அம்மக்களைக் காப்பாற்ற நீங்களேன் எவ்வித முயர்ச்சியும் செய்வதில்லை? பாரத நாட்டில் கொடிய பஞ்சகாலங்களில் பல்லாயிரம் மக்கள் உண்ண உணவில்லாமல் பிராணனைவிட நேரிட்டதே, அப்பொழுது அவர்களை ரக்ஷிக்க கிறிஸ்தவ சமயத்தவரான நீங்கள் செய்த உதவி யென்ன? ஏதுமில்லையல்லவா? இந்தியாவின் மூலைமுடுக்குகள் தோறும் நீங்கள் உங்களுடைய மாதாகோயில்களைக் கட்டுகிறீர்கள். ஆனால் கீழ்தேசத்தாரை மதக்குறைவானது வருத்துவதில்லை. அவர்களுடைய சமயம் கடலினும் பெரிதாக விளங்குகின்றது. குடிக்கக் கூழுமின்றி அவர்களிற் பலர் வறுமையுறுகின்றனர். இந்தியாவில் கால்சுட, தலை கொதிப்படைய, நெஞ்சுலர, நா வரள, வயிறு வாட 'அம்மா பிச்சையெனக் கையிலகலேந்தி' எத்தனையோ பேர் கதறுகின்றனரே. அவர்கள் உணவு கேட்டால் நாம் மண்ணை யள்ளியா கொடுப்பது?

குடிக்கக் கூழுமில்லாமல் வறுமையுற்றவர்களுக்கு சமயப் பிரசாரம்செய்தால், அது அவர்களை ஏளனஞ்செய்வதுபோ லல்லவா யிருக்கின்றது. பசிப்பிணியால் வருந்துபவருக்கு வேதாந்தோபதேசமென்ன? அது அவர்களை எள்ளுவது போலல்லவா இருக்கும்? எங்கள் தேசத்தில் நாங்கள் பொரு ளைக் கருதி ஞானோபதேசம் செய்பவர்களைச் சாதியினின்றும் விலக்கி, அவமானப் படுத்துவோம். எனது தாய் நாட்டின் கண்ணுள்ள ஏழை மக்களைக் கைதூக்கிவிட வெண்ணி நான் இங்குற்றேன்; கிறிஸ்தவர் நாட்டில், கிறிஸ்தவர்களிட மிருந்து 'அஞ்ஞானி' என்றழைக்கப்படும் எனது சகோதரர் களுக்கு எவ்வளவு உதவி கிடைக்குமென்பதைத் திட்பமா யறிந்து கொண்டேன்.

அப்பால் மகாசபை கூடிய பன்னிரண்டாம் நாட் கூட் டத்தில் 1893ஞ செப்டெம்பர்மீ 22உ அம் மகாசபை யின் 'சாஸ்திர ஆராய்ச்சிப் பிரிவுசபை'யின் ஆதரவில் 'வைதீக ஹிந்துமதம்' என்பது பொருளாக சருக்கரைப் பந்தலிற் றேன்மாரி பெய்ததெனும் வழக்கு மெய்யாமாறு ஓர் உபந் நியாசஞ் செய்தார். அன்று கத்தோலிய குருமார்கள், 'பிரா டஸ்டெண்ட்' பாதிரிமார்கள், யுத்திவாதிகள், சமயாசார விர்ப்பன்னர்களாகிய பலரும் எள்விழ இடமின்றி நிறைந் திருந்தார்கள். அவர்களுக்கு இடையிடையே உண்டான பல சந்தேகங்களுக்கும் சுவாமிகள் தக்க விடையளித்தார். அவர்கள் விருப்பிற்கிணங்கி வெளியிடங்களில் ஹிந்து தர்மத் தைப்பற்றி உபந்நியாசிக்கவும் சம்மதித்தார். அறிவாளிகள் பலரும் அவரைச் சூழ்ந்துகொண்டனர். 'குளம் வெட்டித் தேரை வழிச் சென்றூ றில்லை' யல்லவா?

பிறகு மகா சபையின் பதினூரும் நாள் விழாவில்—செப் டெம்பர்மீ 26உ சுவாமிகள் பின் வருமாறு உபந்நியாசஞ் செய்தார்:

எனது சகோதரர்களே!

நான் பௌத்தனல்லன் என்று நீங்கள் கேள்வியுற்றிருக்கிறீர்கள். ஆனாலும், என்னை ஒருவகையில் பௌத்தனென்றும் சொல்லலாம். சீனர்களும், ஜப்பானியரும், சிங்களரும் தத்தம் லோக குருவான புத்தரது உபதேசங்களை அனுசரித்து நடந்ததால், பாரத நாட்டினராகிய ஹிந்துக்கள் அவரை ஈஸ்வராவதாரமென்றே மதித்து ஆராதித்து வருகிறார்கள். நான் பௌத்த சமயத்தின் குணதோஷங்களை ஆராயப் போவதாகச் சொல்ல சற்றுமுன் கேட்டிருக்கிறீர்கள். அதனால் நான் குற்றங்கூறப் போகின்றேனென்று நீங்கள் சம்சயப்படவேண்டாம். புவனத்தில் எவரை யான் அவதார புருஷராகக் கொண்டாடுகிறேனோ அவரைப்பற்றி நிந்திப்பது எனது கருத்தன்று. ஆனால், புத்தபகவானைப் பற்றிய எங்கள் அபிப்பிராயமெல்லாம், அவரை அவருடைய சீடர்கள் சரியாகத் தெரிந்து கொள்ளவில்லை யென்பதுதான். யூத மதத்திற்கும், கிறிஸ்தவ சமயத்திற்கும் உள்ள சம்பந்தா சம்பந்தமெதுவோ அதுதான் இப்போது பௌத்த மதத்திற்கும் வேதாந்த ஹிந்துமதத்திற்குமிடையே நிலவுவது. இயேசு கிறிஸ்துநாதர் ஓர் யூதர்; சாக்கிய முனிவர் ஓர் ஹிந்து. ஆனால் அவர்களுக்கிடையேயிருந்த பேத மென்னையெனில்,-யூதர்கள் இயேசு கிறிஸ்துவை எதிர்த்ததுமட்டுமின்றி அவரைச் சிலுவையில் அறைந்தார்கள்; ஹிந்துக்கள் சாக்கிய முனிவரை தெய்வமாக ஏற்றுப் போற்றுகின்றனர். ஆனால் இன்றைய பௌத்த சமயத்திற்கும், புத்த பகவானின் உண்மையான உபதேசங்களுக்கும் உள்ளபேதம் யாதெனில், சாக்கியர் எந்த சமயக்கொள்கையையும் புதிதாகப் புகட்டவந்தவரில்லை யென்பதுதான். இயேசு கிறிஸ்துவைப்போலவே சாக்கியமுனிவரும் பிறவிப்பயனை நிறை

வேற்ற அவதரித்தவரே யல்லாமல், ஏற்கனவேயுள்ளதைக் கெடுக்க வந்தவரன்று. இயேசுவின் விஷயத்தில் மட்டும், பூர்வகால மக்களான யூதர்கள் அவரை அறிந்து போற்று மற் போயினர். புத்தபகவான் விஷயத்தில், அவரது அத்யந்த சீடர்களுங்கூட அவருடைய உபதேசங்களின் உயர்வை யறியாமற் போயினர். யூதர்கள் கிறிஸ்துவின் அரிய உபதேசங்களைப் பழைய ஏற்பாட்டின் பூரணமென அறிந்து கொள்ளாமற் போனது போன்றே பௌத்தர்களும், ஹிந்து மதத்தின் முடிவே பௌத்த மதமென்பதை உணராமற் போயினர். சாக்கியமுனிவர் பூர்த்திசெய்ய வந்தாரே யல்லாமல் அழிக்க வரவில்லை யென்று நானுங்களுக்கு மறுமுறையும் சொல்லுகிறேன். ஹிந்துமதத்தின் சிறந்த கொள்கைகளை முற்றிலும் தமது வாழ்க்கையில் விளக்கிக்காட்டிய மகானுபாவர் அவரே யாவார்.

ஹிந்துக்களுடைய சமயமானது கர்மகாண்டம் ஞான காண்டமென்னும் இரண்டு பெரும் பிரிவுகளை யுடையது. ஞானகாண்டத்தை முக்கியமாக அனுசரிப்பவர்கள் சந்நியாசிகளே. அதில் ஜாதி வித்தியாசமில்லை. இந்தியாவில் இழி குலத்தோனும் உயர்ந்த ஜாதியானும் துறவு பூணலாம். அவ்விருவரும் அப்பொழுது ஒன்றாகி விடுகின்றனர். வேதாந்தத்தில் ஜாதிபேதமில்லை; ஜாதியென்பது ஜனசமூகத்தில் உண்டான ஓர் கட்டுப்பாடேயன்றி வேறில்லை. சாக்கிய முனிவர் ஓர் துறவிதான். வேதத்தின் மறைபொருள்களை வெளிப்படுத்தி, அவற்றை உலக முழுவதும் பரவுமாறு செய்த தயாளு அவரே யாவர். உலகத்தில் சமயப்பிரசாரத்தை அனுஷ்டானத்திற்குக் கொண்டு வந்தவரும் அவரே. மதப்பிரசாரஞ் செய்து மக்களை நல்வழிப் படுத்தலாமென்ற உண்மையை முதல் முதலாக அனுஷ்டித்தவரும் அவரே யாவார்.

ஏழைகளிடத்திலும், முக்கியமாக அஞ்ஞானிகளிடத்திலும் அவர் கொண்டிருந்த ஆச்சரியகரமான அனுதாபமே அவரது மகிமைக்கு முக்கிய காரணம். அவருடைய சீடர்களுள் சில பிராம்மணர்களு மிருந்தனர். புத்தபகவான் தர்மோபதேசஞ் செய்யத்தொடங்கிய காலத்தில், இந்தியாவில் சம்ஸ்கிருத பாஷை பேச்சு வழக்கற்றுப்போயிற்று. புலவர் தம் புத்தகங்களில் மட்டும் அது ஏட்டுச் சுரைக்காயாக விருந்தது. புத்தபகவானுடைய பிராம்மண சிஷ்யர்களிற் சிலர், அவருடைய உபதேசமொழிகளை சம்ஸ்கிருத பாஷையில் மொழிபெயர்க்க விரும்பினர். ஆனல் புத்தர் 'நான் ஏழைகளுக்காகவே அவதரித்தவன்; சாதாரண மக்களைக் காக்கவே வந்தவன். ஆதலால், சாமான்ய மக்களின் பேச்சு வழக்கிலுள்ள பாஷையிலேயே யான் பேச விரும்புகிறேன்' என்று கண்டிப்பாய்க் கூறிவிட்டார். ஆதலால், அவருடைய உபதேசங்கள் பெரும்பான்மையும் இந்தியாவில் அப்போது வழங்கிய * 'பாலி' என்னும் பாஷையிலேயே வரையப்பெற்று இன்று முள்ளன.

சாஸ்திர விசாரமும், வேதாந்தமும் எவ்வித நிலையையெய்தியபோதிலும், உலகில் மரணம் என்னும் வியாபாரமொன்று நிலவும் வரை, மனிதனுடைய மனத்தில் துர்ப்பலம் என்னும் மனோபாவம் உள்ளவரை, அத்துர்ப்பலத்தால் மனிதன் மனங்கரைந்து ஈஸ்வரனை நோக்கி ஓலமிடுகின்றவரையிலும், இறைவனிடத்தில் ஒருவித நம்பிக்கை யிருந்தே தீரும்.

ஒருவகையில், புத்ததேவாது சீடர்கள் தத்துவஞான விஷயமாய் வேதமென்னும் அசலத்தின் மீது எவ்வளவு மோதித்தாக்கி அசைத்துப் பார்த்தும் அவர்களால் அதனை

* பாலி யென்பது சம்ஸ்கிருத மொழியினின்றும் ஜனித்த பல பிராகிருத பாஷைகளுள் ஒன்று.

யழிக்க முடியவில்லை. மற்றொரு வகையிலும் ஒவ்வொரு ஸ்திரீ புருஷனும் மிக்க அன்புடன் எந்த பரமபுருஷனை ஆராதிக்கின்றார்களோ, அந்த இறைவனை எல்லா ஜாதியாரிடத்தினின்றும் அபகரித்து விட்டனர். இது காரணமாகத்தான் புத்தமதம் இந்தியாவில் இருந்த இடந் தெரியாமல் அழிந்து போய்விட்டது. இப்போது, அம்மதத்தின் பிறப்பிடமாகிய இந்தியாவில் 'நான் பௌத்தன்' என்று சொல்லிக்கொள்பவன் ஒருவன் கூட இல்லை.

ஆனால், அதேகாலத்தில் பிராம்மண தர்மமும் சிற்சில அம்சங்களை யிழந்தது. ஜனசமூகத்தைச் சீர்திருத்தவேண்டுமென்ற பேரவாவும், ஒவ்வொரு ஜீவப்பிராணிகளிடத்துங் காட்டிய ஆச்சரியகாமான காருண்யமும், தயாளத்துவமும் பிராம்மண தர்மத்திற்கு ஒருவிதக் குறைவை விளைத்ததெனலாம். 'எந்த ஹிந்துவும் பொய் பேசான்; எந்த ஹிந்து ஸ்திரீயும் தனது பதிவிரதா தர்மத்தினின்றும் தவறாள்' என்று அக்காலத்தில் கிரேக்கச் சரித்திராசிரியர் ஒருவர் யெழுதியபடி இந்திய ஜனசமூகம் எதனால் மேன்மை யுற்றதோ அதற்கு ஆஸ்பதமாயிருந்த அப் பௌத்தமதத்தின் விசேஷத்தன்மைகள் யாவும் பிராம்மண தர்மத்தை விட்டகன்றன.

[அப்பால், ஆங்கு வீற்றிருந்த பௌத்தப் பிரதிநிதிகளைப் பார்த்து]

பௌத்த அன்பர்களே! நாங்கள் உங்களை விட்டுப் பிரிந்திருக்க இயலாது; எங்களை விட்டுப் பிரிந்து நீங்களு மிருக்க முடியாது. நாமிருவரும் பிரிந்து போய்விட்டமையால், பிராம்மணர்களுடைய உயர்ந்த புத்தியும், தத்துவ ஞான ஆராய்ச்சியு மில்லாமல் நீங்கள் முன்னடைய முடியாதென்பதையும், ஜீவகாருண்ய சம்பன்னர்களான உங்களுடைய

அன்பின்றி நாங்கள் நிற்க முடியாதென்பதையும் இப்பொழுது நாம் தெரிந்துகொண்டோம். இவ்வாறு நாம் ஒருவரைவிட் டொருவர் பிளவுபட்டுப் போனதுதான் இந்தியாவின் மிடிமைக்குக் காரணம். இந்தியாதேசம், முப்பது கோடி பிச்சைக்காரர்கள் வதியுமிடமானதற்கும் இதுவே காரணம். இந்தியா கடந்த 'ஆயிரமாண்டுகளாக வெளிநாடுகளிலிருந்து படையெடுத்து வருவோருக்கெல்லாம் அடிமையாகி வருவது மிதனாலேயே. ஆதலால், நாம் பிராம்மணர்களுடைய மேலான புத்தியையும், லோக குருவான புத்த பகவானின் கருணைநிறைந்த ஹிருதயத்தையும், மகிமைபொருந்திய ஆன்மாவையும், அற்புதலோக ஹிதசக்தியையும் ஒன்றுசேர்த்து இன்புற்றுக் கூடி வாழ்வோமாக.

அதன்பின், சுவாமிகள் முடிவுரையாக—1893ஞு செப்டேம்பர்மீ 27உ உபந்யசித்தார். அது பின்வருமாறு:

## முடிவுரை.

அகில சர்வதர்ம மாகாசபையானது வெகு சிறப்பாய் நடைபெற்றுவிட்டது. இப்பவித்திரமான காரியத்தில் முயற்சித்து உழைத்தவர்களுக்குப் பரம கருணாநிதியான சர்வேஸ்வான் துணையாக நின்று, அவர்கள் சுயநலங் கருதாது பட்ட சிரமத்திற்குத் தக்க ஜயத்தை யளித்திருக்கின்றார்.

எவர்களுடைய நிஷ்களங்க விசால மனோபாவத்தாலும், முதலில் கனவுகண்டு அப்பால் அதை நிறைவேற்ற வேண்டுமென்ற முயற்சியாலும், இம்மகாசபை நிறைவேறிற்றோ அச்சத்குண சம்பன்னர்களுக்கு நான் எனது மனப்பூர்வமான வந்தனத்தைச் சமர்ப்பிக்கிறேன். இம்மேடையில், இடைவிடாது பொழிந்தோடிய உதார பாவனைகளுக்கும் எனது மனமார்ந்த வந்தனம். கல்வி கேள்விகளிற் சிறந்

தோர்களான இச் சபையோர்கள், என்பொருட்டு காட்டிய கருணைக்காகவும், சகல சமயங்களுக்கும் பரஸ்பரமுள்ள வைஷம்யத்தை (விஷம குணத்தை)த் தணித்தற்குப் பயன் படும் ஒவ்வொரு கருத்தையும் காரியசித்திக்குக் கொண்டு வந்த பெருமைக்காகவும் நான் வந்தன மளிக்கின்றேன். இந்த இனிமையான சங்கீதத்துவனியி னிடையே, அவ்வப் பொழுது அபஸ்வரங்கள் சிற்சில தோன்றின; ஆனால் அவை ஒன்றுக்கொன்று மாறுபட்டு, நமது சங்கீதத்தைப் பின்னும் இனிமையாக்கினதால் அவற்றிற்கும் எனது வந்தனம் உரிய தாகும்.

சமய ஐக்கியத்திற்குரிய பொதுவான சில அரிய விஷயங்களைப்பற்றி மகாசபையில் பிரஸ்தாபங்கள் நடைபெற்றன. இதைக்குறித்து எனது சொந்த அபிப்பிராயத்தை வெளியிட இப்பொழுது யான் விரும்பவில்லை. ஆனால், இங்கு எவரேனும் சமய ஒற்றுமை, ஏதேனு மொரு சமயத்தின் வெற்றியாலும், மற்ற சமயங்களின் அழிவாலும் கைகூடு மென்றெண்ணுவரேல். அவருக்கு "சகோதரரே! உமது எண்ணம் கைகூடாது" என்று நான் உறுதியாகச் சொல்லு வேன். கிறிஸ்தவர்கள் ஹிந்துக்களாக வேண்டுமென்று நான் இச்சிக்கின்றேனா? அவ்விதம் இல்லாதிருக்குமாறு இறைவன் அருள் பாலிப்பாராக. பௌத்தர்களும் ஹிந்துக்களும் கிறிஸ்தவர்களாகவேண்டு மென்பதும் எனது நோக்கமா? எம் மிறைவன் அதனையும் தடுப்பாராக.

நிலத்தில் விதையை விதைத்துவிட்டோம். அதைச் சுற்றிலும் மண்போட்டு, நீர் பாய்ச்சி, காற்று வீசும்படி செய்கிறோம். அந்த விதை மண்ணாகவோ, தண்ணீராகவோ, காற்றாகவோ மாறிவிடுகிறதா? இல்லை. அது செடியாகித் தன்னுடைய வளர்ச்சிக் கேற்றவாறு பரிணமித்து, காற்றை

யும், மண்ணையும், தண்ணீரையும் தன்னினமாகச் சேர்த்துக் கொண்டு தன்னினத்திற்கேற்ற தாவரப் பொருள்களாக்கி மரமாய் ஓங்கி வளருகின்றது.

மத விஷயமு மிது போன்றதே. கிறிஸ்தவன் ஹிந்துவாகவோ பௌத்தனாகவோ மாறவேண்டியதில்லை. ஹிந்துவோ, பௌத்தனோ கிறிஸ்தவனாக மாறவேண்டியதில்லை. ஆனால் ஒவ்வொரு மதமும் ஏனைய சமயங்களின் சத் அம்சங்களைப் பெற்று, அதனால் தன் சொரூபத்தைப் பாது காத்துக் கொள்வது மட்டுமின்றி தன் னியல்புக்கேற்ற விதிகளை அனுசரித்து விருத்தியடைதல் அவசியம்.

இந்த சர்வதர்ம மகாசபையானது உலகத்தாருக்கு எதையேனும் விளக்கிற்றெனில் அது யிதுவே: தூய்மை, சித்தசுத்தி, அருள், 'என்னும் அரியகுணங்கள் உலகத்திலுள்ள எந்த தனி மதத்திற்கும் தனிப்பட்ட சொந்தமான பொருளல்ல வென்பதையும், ஒவ்வொரு சமயத்திலும் சத் குண சம்பன்னர்களான ஸ்திரீ புருஷர்கள் உள்ளா ரென்பதையும், இச்சபை விளக்கியிருக்கிறது. இதுபோன்ற உயர்ந்த பிரத்யக்ஷப் பிரமாண மிருக்கும்பொழுது கூட, எவாரவது தமது சமயமே ஏகமாக வெற்றி பெற்று விளங்குமென்றும், ஏனைய சமயங்கள் வற்றிவிடுமென்றும் பகற்கனவு கண்டு கொண்டிருப்பரேல், நான் அவருக்காக என் உளங்கனிய வருந்தி, யார் எவ்வளவு தூரம் குறுக்கிட்டாலும் ஒவ்வொரு சமயத்தின் கொடியிலும்

"உதவியே யன்றி உற்பாதமில்லை. ஏற்று அளிப்பதே யன்றி தூற்றி யொழிப்பதில்லை. சுபமும் சாந்தியுமே யன்றி கலகமும் கபடமுமில்லை"

என்ற வாக்கியமும் விரைவில் வரையப்பெறு மென்பதையும் நான் அவர்களுக் கெடுத்துக் காட்டுவேன்.

---

சர்வ தர்ம மகா சபையின் நடவடிக்கைகளை யெல்லாம் அமரிக்காவிலிருந்த பத்திரிகைகள் யாவும் நிரப்பிக்கொண் டெழுந்தன. அவையாவும், சுவாமிகள் செய்தருளிய ஹிந்து மதப்பிரசங்கமே மிகச் சிறந்ததென்று புகழ்ந்து வரைந்தன. அச் சொற் பொழிவு நிகழ்ந்த அன்று, ஈ யுட்காரவு மிட மின்றி அம்மண்டபம் முழுவதும் பெரும்பாலும் பெண்க ளாலும், சிறுபான்மை ஆடவராலும் நிறையப்பெற்றிருந்தது. 'நிர்ச்சப்தமாக அனைவரும் பொறுமையுடன், சுவாமிகளின் பிரசங்கத்தைக் கேட்க, முன் பேசியவர்கள் சொற்பெருக் கையும் அமைதியாகக் கேட்டனர்' ரென்று ஒரு சிகாகோ பத்திரிகை வரைந்தது. சுவாமிகளின் உபந்நியாசத்திலிருந்து உலக சமய சம்பந்தமான விஷயத்தில் ஒரு புது சகாப்தம் தொடங்கிற்றென்பதும் மிகையாகாது.

சுவாமிகளுடைய உபந்நியாசம் சர்வசமய சமரஸபாவ னைக்கே வித்தாகவும், உலக ஒற்றுமைக்கே அஸ்திவாரமாகவு மிருந்தது. சுவாமிகள் புறச்சமயிகளைத் தூஷிக்கவில்லை. ஹிந்து மதத்தின் மகிமையைச் சித்தாந்தப்படுத்தி அவர் ஏனைய சமயங்களை ஆதரித்தும், சமயிகளைப் புகழ்ந்தும் பேசினர். அவனியின்கண்ணுள்ள சகல மதங்களுக்கும் ஹிந்து மதமே தாயகமென்பதை அவர் நிரூபித்த பெருமை தான் மிக்க விசேடமா யிருந்தது. 'நாங்கள் எல்லா சமயங் களையும் சமரஸ பாவனையுடன் பாராட்டி, எல்லா மதங்களும் சத்தியமானவை யென்று ஒப்புக்கொள்ளுகிறோம்' என்று தொடங்கி அவர் பேசிய வாக்கியங்களின் உயர்ந்த கருத்து கள் மேல் நாட்டாருக்கு சமத்வநோக்கத்தைப் போதிப்பதா யிலங்கின. 'ஹிந்துக்களான எங்கள் மூதாதையர்கள் மனத்தி லொன்றும் வாயிலொன்றுமாக வாழ்ந்ததில்லை. இறைவனின் இலக்கணங்களைப் பற்றிக் கூறும் நூல்களை நாங்கள் வாசித் துக்கொண்டே போவதில்லை. உண்மையான ஹிந்துஞானி

கடவுளை நேருக்குநேர் காணவேண்டு மென்பார். வீண் வாய் வேதாந்தம் பேசுவதில் யாங்கள் விருப்புறுவதில்லை. மகரிஷிகள் 'நாங்கள் கடவுளைக் கண்டோம்; ஜீவ பிரம்மைக்கியத்தை அனுபவித்தோம்' என்று கூறுகின்றனர்" என்று ஹிந்துமதத்தின் பெருமையை எடுத்தோதினர்.

வேதமென்பதைச் சொல்லளவில் மட்டும் அறிந்தவர்களாய் அதிற் கூறப்பெற்றுள்ள விஷயங்களையோ, அவற்றின் கருத்தையோ அறியாதாருக்கு வேதங்களைப்பற்றி யவர் விளக்கமாகக் கூறினர். 'ஹிந்துக்களின் நித்யவாழ்விலேயே வேதவேதாந்தக் கருத்துகள் ஆழ்ந்து கிடக்கின்றமையாலும், அவற்றைப் பயபக்தி, விநய விசுவாசத்துடன் அனுஷ்டித்து பிரம்மானுபூதியை யடைதலாலும் இந்தியாவில் ஞானிகள் அதிகம்' என்றவர் சிறப்பித்துப் பேசினர். அச் சபையிற் பேசிய பலருள்ளும் ஆன்ம தத்துவத்தைப்பற்றி விசேடமாக விளக்கிப் பேசியவரும் சுவாமிகளே யாவார்.

அவருடைய பிரசங்கத்தில் முக்கியமாக சமயத்தின் தத்துவாதாரத்தை அவர் விளக்கிக்காட்டி, ஹிந்துமதக் கொள்கைகளைக் கிறிஸ்தவர் சமயக் கோட்பாடுகளுடன் பொருத்திக் கூறிய விசேஷமே விசேஷம். அவருடைய உபந்நியாசத்தால் பாரத பூமியின் தொன்மையும் மேன்மையும் மேல்நாடுகளில் விளங்கலாயின. ஹிந்து மதமே உலக மதமென்று சுவாமிகள் ஸ்தாபித்த தன்மையே இந்தியாவின் புகழைப் பெருக்கிற்று. சனாதன தர்மத்தின் ஞானபரமான கொள்கைகளை அவர் மேல் நாட்டாருக்குத் தெளிவாய் எடுத்துக் காட்டினர். அவருடைய முடிவுரையின் இனிய வசனங்கள் 'அன்பு வெள்ளம் பெருகவேண்டும். உதிரவெள்ளமும் வேற்றுமையு {மொடுங்கவேண்டும். கூடுவதன்றிக் குலைவது வேண்டாம். சமாதானமும் ஒற்றுமையும் சமயங்

களின் நோக்கமே யன்றி விரோத பாவமல்ல' என்று விளம்பினார்.

ஊர்பேர் கூறாது பெயரைமாற்றி யுரைத்துக்கொண்டு பரிவ்ராஜகராக அலைந்து திரிந்த விவேகானந்த சந்நியாசி, சர்வதர்ம மகா சபையானது முடிவானபின் உலகப்பிரசித்தரானார். காடு மேடுகளில் கால் நடையாக ஸ்தல யாத்திரை செய்த அவர் ஜகத் குருவாக உலகத்தாரால் ஒப்புக்கொள்ளப்பட்டார். உலகமென்ற கோயிலின் மதில்களிலெல்லாம் அவருடைய திவ்யநாமம் எதிரொலி செய்தது. அவருடைய திருவுருவப்படம் சிகாகோ நகரத்தின் ஒவ்வொரு தெருவிலும் 'விவேகானந்த யதி' என்று அடியில் வரையப்பெற்றுத் தொங்கவிடப்பெற்றது. அப்படத்தை அவ்வழி செல்லும் அமரிக்கரனைவரும் வணங்கிப்போயினர். அந்நாட்டுப் பத்திரிகைகள் யாவும் சுவாமிகளை அநுதினமும் போற்றவாரம்பித்தன.

சர்வதர்ம மகாசபை வெகு சிறப்பாக முடிவடைந்தது. கிறிஸ்தவ மதானுசாரிகள் அமரிக்காவின் பிரதம நகரங்களிலெல்லாம் சுவாமிகளை வரவேற்றுபசரித்தார்கள்; தத்தம் சர்வ கலாசாலைகளிலும் பிரதம நகரமண்டபங்களிலும் பிரசங்கிக்கச் செய்து ஆனந்தித்தார்கள். "விவேகானந்த சுவாமிகள்" என்ற திருப்பெயர் ஒவ்வொரு அமரிக்கரின் அந்தரங்க ஹிருதயத்திலும் ஆழ்ந்து அவர்களைப் பரவசமாக்கிற்று. இரண்டு வருஷகாலம் சுவாமிகள் ஓயாமல் அழைத்த இடங்களுக்கெல்லாம் விஜயம் செய்து பரிசுத்த பாரத தர்மத்தைப் பரப்பி வந்தார். பின்னர், இங்கிலாந்தி லிருந்த பல பிரமுகர்களின் வேண்டுகோளுக் கிணங்கி இங்கிலாந்துக்கு விஜயம் செய்தார். பிரஞ்சு தேசத்தின் பிரதம பட்டணங்களை யெல்லாம் சுற்றிப் பார்த்துவிட்டு, இங்கிலாந்தில்

சில காலம் வேதாந்த முழக்கம் செய்து மீண்டும் அமரிக்காவை யடைந்தார்.

அமரிக்கர்கள் அனுதினமும் திரள் திரளாக வந்து அவரிடம் உபதேசம் பெறலாயினர். ஆர்வமுடன் வந்த ஆத்மதாப முடையவர்களுக்கு சுவாமிகள் கீதை—ராமாயணம்—பாகவதம் முதலியவற்றை தத்துவார்த்தங்களுடன் உபதேசித்தார். அநேகர், ஹிந்துமத ப்ரபாவத்தில் ஈடுபட்டு அவரிடம் தீக்ஷைபெற்று காவியேற்றுச் சந்நியாசிகளாய் புதிய தீக்ஷாநாமம் பூண்டு, அவர் ஆக்ஞைப்படி சேவை செய்து வந்தார்கள். குட்வின் என்னும் பெயர்கொண்ட ஓர் யுவர், சுவாமிகள் செய்தருளிய பிரசங்கங்களனைத்தையும் சாங்கேதிக லேகநப்படி அவ்வப்பொழுது எழுதி, பின்னர் விரிவு படுத்திப் பத்திரிகைகளுக்குக் கொடுத்து வந்ததோடு, சுவாமிகளுடைய சிஷ்யராகி அவருக்கு ஆத்மசேவையும் செய்துவந்தார்.

அதன்மேல் சுவாமிகள் 'திருப்திகாமாய் அமரிக்காவில் அத்வைதமத ஸ்தாபனஞ் செய்து விட்டோம்' என்ற நம்பிக்கையையடைந்து, நேராக இங்கிலாந்திற்கு வந்து அங்கிருந்து, சேவியர் துரை, துரைசானி, குட்வின் முதலிய ஆங்கிலேய சிஷ்யர்கள் சகிதம் 'ப்ரின்ஸ் ரீஜெண்ட் லியப்போல்ட்' என்னும் நீராவிக்கப்பலில் ஏறி 1897-ம் வருஷத்தில் பாரத பூமிக்குத் திரும்பினர். மேல்நாட்டில் மூன்றாண்டுகளாய் ஓய்வின்றி உபந்நியாசங்கள் செய்தமையால்அவர் தேகம் இளைத்திருந்தது. இந்தக் கப்பல் பிரயாணம் அவருக்கு சிரம பரிகாரமாயிருந்தது. சுவாமிகள் நேராக லங்கையின் ராஜதானியான கொழும்பு நகரத்தில் வந்திறங்கினர். கொழும்பு வாசிகள் அதிவிமரிசையாக சுவாமிகளை வரவேற்றுபசரித்து, சுவாகதோபசாரப் பத்திரங்கள் வாசித்துக்

கொடுத்து யாழ்ப்பாணத்திற்கு எழுந்தருளச் செய்து அங்கும் அமோகமாக வரவேற்று, உபந்நியசிக்கச்செய்து சிரவணானந்த மெய்தினர். இலங்கையைச் சேர்ந்த அன்பர்கள் செய்த மகோபசாரத்தைப் பாராட்டி சுவாமிகள் "பெரிய ராஜதந்திர நிபுணனுக்காவது, மகாவீரனுக்காவது கிடைத்தற்கருமையான உபசாரத்தைக் கேவலம் பிச்சை யெடுக்கும் சந்நியாசியாகிய எனக்கு நீங்கள் செய்ததானது ஹிந்துக்களின் மனம் என்றும் மத சம்மிதமானதென்பதை நிரூபிக்கின்றது" என்று பேசி, அனைவரையும் மகிழ்வித்து இராமேஸ்வரத்திற்குச் சென்று, சுவாமி தரிசனம் செய்து, இராமனாதபுரம் மகாராஜா ஸ்ரீ பாஸ்கர சேதுபதி யவர்களின் வேண்டுகோளுக் கிசைந்து இராமனாதபுரத்தில் சில தினங்கள் தங்கி பரமகுடி, மதுரை, கும்பகோணம் முதலிய நகரங்களில் இரண்டொரு நாட்கள் தாமதித்துப் பிரசங்கித்து சென்னைக் கேகினர். சென்னைப்பட்டணத்தில் அதிவிமரிசையான வரவேற்பும், உபசாரப் பத்திரங்களும் வழங்கப்பெற்றன. அங்கு சுவாமிகள் இரண்டொரு பிரசங்கங்கள் செய்துவிட்டு, கல்கத்தாவை யடைந்தார். கல்கத்தாவாசிகள் அவரை மிக்க சிறப்பாக வரவேற்றார்கள் என்று கூறவும் வேண்டுமோ? அது அவருடைய ஜன்மபூமியன்றோ! அந்த வரவேற்பின் விமரிசையை அடியேனால் எடுத்தெழுதத் தரமன்று. அவருடைய வரவால் வங்காளிக ளடைந்த மன உற்சாகத்திற்கு அளவேயில்லை.

சுவாமிகள் தமது மேல் நாட்டு சிஷ்யர்களுடன் கல்கத்தாவிற்குச் சமீபத்திலுள்ள பேலூர் ஆஸ்ரமத்தில் கொஞ்சகாலம் வசித்து, பிறகு வட இந்தியா முழுதும் சுற்றுப் பிரயாணம் செய்தார். அந்த யாத்திரையில் சுவாமிகள் தாம் பிரசங்கித்ததுமன்றி, ஹிந்து மத பிரபாவத்தை ஐரோப்பிய சிஷ்யர்களைக் கொண்டும் பிரசங்கிக்கச் செய்து, மதோத்

தாரண வேலையையும், கஷ்டநிவாரண கைங்கரியத்தையும் விமரிசையாகத் தமது குருபாய்களின் இடையரு உழைப்பா லும், தன்னலமற்றுத் தமது தாய் நாட்டை மறந்து, ஹிந்து மதத்திலும் இந்தியாவிலும் பிரவேசம் செய்த ஐரோப்பிய சிஷ்யர்களின் மேலான உதவியாலும் நடத்தி வந்தார். ஆத்மவிசாரத்திற்கும் மதசேவை புரிவதற்கும் சித்தராய் வெளியேறிய சிஷ்யர்களுக்கு ஓர் தலைமை வாசஸ்தலமாக கல்கத்தா நகருக்குப் பக்கவிலுள்ள பேலூரில் ஓர் மடத்தை "ஸ்ரீ ராம கிருஷ்ண மடம்" என்ற பெயருடன் ஸ்தாபித்து அதோடு ஓர் அன்னதான சத்திரத்தையும், தர்மோபதேசப் பாடசாலையையும் ஏற்படுத்தினர். சென்னையில் ஸ்ரீ ராம கிருஷ்ணரின் சிஷ்யரும், சுவாமிகளின் குருபாயுமான ஸ்ரீ ராம கிருஷ்ணனந்த சுவாமிகளின் பெரு முயற்சியால் ஸ்ரீ ராம கிருஷ்ண மடமொன்று ஸ்தாபிதமாகி நடைபெற்று வந்தது. சாதுக்களின் ஏகாந்த வாசத்திற்காக ஹிமாலயத் தில் அல்மோராவுக்குச் சமீபத்தில் மாயாவதி என்னும் மான சாவில் அத்வைத ஆஸ்ரமம் ஒன்று நிறுவப்பெற்றது. சென்னை மடத்தாரால் "ஸ்ரீ ராம கிருஷ்ண விஜயம்" என் னும் தமிழ் மாஸிகையும், "பிரம்மவாதினி" என்னும் ஆங்கில மாதப் பத்திரிகையும், மாயாவதி அத்வைத ஆஸ்ரமத்தாரால் "பிரபுத்த பாரதா" என்னும் ஆங்கில மாஸிகையும் மற்றொரு வங்காளிப் பத்திரிகை கல்கத்தா—பேலூர் மடத்தாராலு மாக, ஆரம்பிக்கப்பட்டு வேதாந்த சேவைசெய்து வரப் பெற்றது.

இதன்மேல், சுவாமிகள் ஏதோ ஒருவித சக்தியால் தூண்டப்பட்டு சுவாமி அபேதானந்தருடன் மீண்டும் அம ரிக்காவிற்குப் பிரயாணமானர். அமரிக்காவை யடைந்து, தாம் அபூர்த்தியாக விட்டுவைத்திருந்த சில தர்ம காரியங் களை முடித்துக்கொண்டு, இங்கிலாந்து வழியாய் ஐரோப்

பாவின் அற்புத நகரங்க ளனைத்தையும் பார்த்து விட்டு, நேராக பம்பாயை யடைந்து அங்கிருந்து கல்கத்தாவிற்கு வந்து சேர்ந்தார். "ஸ்ரீராமகிருஷ்ண மடம்" நல்ல பொருளாதார முடையதாய் பெரிய சுதேச சமஸ்தானத்தைப் போன்ற அமைப்புடன் பாரத மக்களின் ஆத்மானந்த வழிகளிலும், தேகாரோக்யத் துறைகளிலும், வித்யாபிவிருத்தியிலும் அரும்பெரும் சீர்திருத்தங்களைச் செய்து உழைத்து வந்தது. இங்ஙனம் சுவாமிகள் தமது சகபாடிகளை யெல்லாம் சேவையில் தூண்டிக்கொண்டும், அவர்களைப் பிற்கால மதசேவையின் பொருட்டு பழக்கிக்கொண்டும் பேலூர் மடத்தில் வசித்துவரும் நாளில், நிடீரென்று தமது முப்பத்தொன்பதாம் பிராயத்தில், 1902-ம் வரு ஜுலைமீ 4உ மகா சமாதியிற் கூடிவிட்டார். அவரது பொன்மேனி கங்காதீரத்தில் பேலூர் மடத்தைச் சேர்ந்த பூமியில் ஓர் வில்வமரத்தி னடியில் தகனம் செய்யப்பெற்றது.

ஓம் சாந்தி! ஓம் சாந்தி! ஓம் சாந்தி!

சம்பூர்ணம்.

—

# ஆனந்தபோதினி

63

## 64-பக்கம் விஷயங்கள் அடங்கிய

# ஒரு மாதாந்தத் தமிழ்ச் சஞ்சிகை.

---

ஆனந்தபோதினி கலியுகாதி 5017—க்குச் சரியான இராக்ஷஸ ஞு ஆடிமீ 1ௗ, இங்கிலீஷ் 1915ஞு ஜுலைமீ 16ௗ வெள்ளிக்கிழமை, கிருஷ்ண பக்ஷம், சதுர்த்தி திதி, மக நக்ஷத்திரத்தில், செந்தமிழ் நாட்டில் சிறப்புற்று விளங்கிவரும் இம்மாத சஞ்சிகையானது, சென்னையைச் சார்ந்த வியாசர்பாடியில் உள்ள சாது நிலையத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ கரபாத்திர சிவப்பிரகாச சுவாமிகள் திருக்கருணையால் சூட்டப்பெற்ற "ஆனந்தபோதினி" என்னும் அழகியபெயருடன், தமிழ்மக்கள் மனத்தில் ஆனந்தம் பொங்கியெழ உதயஞ்செய்தது. மிகப்பெரியாராகிய சுவாமிகளின் அனுக்கிரகத்தால் இது வெளிப் போந்ததாகலின், தோன்றிய நாள் தொடங்கி, ஆண்டாண்டு தோறும் அளவற்ற சிறப்புடன் வளர்ந்தோங்கித் தமிழறிஞர் பலருடைய் ஆதரணையை அதிகமாகப் பெற்று, இப்போது இருபதினாயிரம் பேர்களுக்கு மேற்பட்ட சந்தாதாரர்களை யுடையதாய்த் திகழ்ந்துவருகின்றது.

ஆனந்தபோதினியில் வைதிகமத விஷயங்கள், லௌகிக விஷயங்கள், கல்வி, கைத்தொழில், வியாபாரம், விவசாயம், சுதேச விதேச வர்த்தமானங்கள் முதலிய நானு விஷயங்களையும் பற்றிய வியாசங்கள் சிறந்த கல்வியாளர் பலரால் எழுதப்பட்டு வருகின்றன.

ஆனந்தபோதினி ஸ்திரீகளுக்கும், புருஷர்களுக்கும், சிறுவர் சிறுமியருக்கும், பண்டிதருக்கும் பாமாருக்கும் மற்ற யாவருக்கும், பயன்படும் வண்ணம் அறிஞரால் இனிய செந்தமிழ் நடையில் எழுதப்பட்டு வருகின்றது.

சந்தா விபரம்:—இந்தியா, பர்மா, சிலோன் முதலிய உள்நாடுகளுக்கு வருடம் 1-க்குத் தபால் கூலி உள்பட ரூபா 1-0-0

பினங், ஸிங்கப்பூர், பஸ்ரா, மெசபடோமியா முதலிய வெளிநாடுகளுக்கு வருடம் 1-க்குத் தபால் கூலி உள்பட ரூபா 1-4-0

# தமிழ் மெட்டீரியா மெடிக்கா

என்னும் அருமையான வைத்திய நூல்.

# MATERIA MEDICA

இவ்வரிய பெரிய வைத்திய புஸ்தகமானது ஆங்கில மருந்துக் கலப்பு விவர முறைகளைத் தமிழில் விளக்கமாக உள்ளங்கை நெல்லிக்கனிபோல் நன்கு விளக்குவது. இன்னின்ன நோய்க்கு இன்னின்ன விதமாக மருந்துகளைச் சேர்த்து மிக்சர் (Mixture) முதலானவை செய்து சாப்பிடவேண்டு மென்பதை இந்நூல் நன்றாகக் கூறுகின்றமையால் இதை ஓர் 'ஆபத்துக்குதவும் தோழன்' என்று அனைவரும் நம்பலாம். இது வைத்திய அனுபவம் மிகப் பெரிதும் உடைய ஒருவரால் எழுதப்பட்டது. ஒவ்வொருவரும் தங்களுக்குத் தாங்களே கூடியவரையில் நோய்களுக்குப் பரிகாரம் செய்துகொள்ளவும் இந்நூல் மிகவும் உபயோகப்படும்.

மேலும் இப்புஸ்தகத்தில் வியாதிகளுக்கு சிகிச்சை செய்ய வேண்டிய விதத்தை மிகவும் தெளிவாய் அனுபோக முறைகளையும் தற்காலம் உபயோகத்திலிருக்கிற பேட்டென்ட் மருந்துகளைப்பற்றியும் (Patent Medicines) எடுத்துக் காட்டி எழுதியிருப்பதால் பாமர ஜனங்களும் நன்றாய் அறிந்து அனுஷ்டித்துக் கொண்டுவர மிகவும் உதவியாயிருக்கிறது.

வைத்தியர்கள் கிடைக்காத சந்தர்ப்பங்களிலும் வைத்தியர்களில்லாத ஊர்களிலும் இப்புத்தகம் மிகவும் அவசியமானது. ஆகவே ஆபத்துக்குதவும் சஞ்சீவி போன்ற இவ் வைத்திய புத்தகம், ஒவ்வொரு வீட்டிலும் கட்டாயம் இருந்தே தீரவேண்டுமென்பது நாம் சொல்லாமலே விளங்கும். இதில் குறித்துள்ள மருந்து முறைகளைத் தக்கபடி கையாளுவதால், எல்லா நோய்களும் நீங்குமென்பது நிச்சயம். அழகிய கலிகோபயிண்டு செய்யப்பட்டது.

விலை ரூபா 1—8—0



ஆனந்தபோதினி ஆபீஸ்,
தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.

